காட்சியாய்க் காண்பானுய்க் காணப் படுபொருளாய்
சூட்சியாய்ச் சூட்சியாற் றேய்வரிதாய் - மாட்சிபெறச் ௩௭

செய்பவனுய்ச் செய்தொழிலாய்ச் செய்பொருளாய்ச் செய்தொழிலா
லுய்பவனு யுய்விக்கு முத்தமனுய் - மொய்கொள் ௩௮

அதுவா யவளா யவனு யவையுங்
கதுவாது நின்ற கணிப்பாய்க் - கதுவாமல் ௩௯

ஐயந் திரிபோ டறியாமை விட்டகற்றிப்
பொய்யென்ப தொன்றும் பொருந்தாராய்ச் - செய்யென்ற ௪0

ஓர்வினையி லின்பமுமற் றோர்வினையிற் றுன்பமுமாஞ்
சார்வினைவிட் டோங்குந் தகையினராய்ப் - பார்வினையில் ௪௧

ஓர்பால் வெறுப்பு மற்றை யோர்பால் விருப்புமுறுஞ்
சார்பான் மயங்காத் தகையினராய்ச் - சார்பாய ௪௨

ஓரிடத்திற் றண்மையுமற் றோரிடத்தில் வெஞ்சினமும்
பாரிடத்திற் கொள்ளாப் பரிசினராய் - நீரிடத்தில் ௪௩

தண்மைமிக ராதென்றுஞ் சார்தம் பழுத்துயர்ந்த
வொண்மையுட னென்றை யுணர்ந்தவராய் - வெண்மையிலா ௪௪

ஒன்று மறிவினுதயாதி யீறளவு
மென்று மிரண்டென்ப தில்லவராய் - மன்றவொளிர் ௪௫

அம்மூன்றி னுள்ளே யடுக்கிவரு மொன்றகன்ற
மும்மூன்றின் மூன்று முனிந்தவராய்த் - தம்மூன்றி ௪௬

வீடாது நின்றும் விரிந்தும் விகற்பநடை
நாடாது நான்கு நசித்தவரா - யூடாக ௪௭

எஞ்சாம லஞ்சி னிடமாய் நடமாடு
மஞ்சாதி யஞ்சு மறுத்தவரா - யெஞ்சாமல் ௪௮

ஈண்டாண் டருளு மிறையோர் தமையாறி
லாண்டாண்டு கண்டா றகன்றவரா - யீண்டாது ௪௯

வாழியுற்ற வாறேறும் வந்து தமக்கிரண்டோ
டேழியற்ற வேழு மிகந்தவரா - யூழியற்றக் ௫0

கட்டிநின்றுட் சோதியொன்று காணத்தொடங்குகின்றே
ரொட்டுகின்ற வெட்டின்மே லெய்தினராய்க் கட்டுகின்ற ௫௧

தேன்றோய் கருணைச் சிவங்கலந்து தேக்குகின்ற
சான்றோர்த முள்ளந் தணவாதாய் - * மான்றமலத் ௫௨

தாக்கொழிந்து தத்துவத்தின் சார்பாந் தனுவொழிந்து
வாக்கொழிந்து மாறு மனமொழிந்து - ஏக்கமுற ௫௩

வாய்க்குஞ் சுகமொழிந்து மண்ணொழிந்து விண்ணொழிந்து
சாய்க்கு மிராப்பகலுந் தானொழிந்து - நீக்கொழிந்து ௫௪

நானுமொழி யாதொழிந்து ஞானமொழி யாதொழிந்து
தானு மொழி யாமற் றொழிந்து - மோனநிலை ௫௫

நிற்கும் பிரம நிரதிசயா னந்தமதாய்
நிற்கும் பரம நிருத்தனெவன் - றற்பரமாய் ௫௬

நின்றானெவனன்பர் நேயமனத் தேவிரைந்து
சென்றா னெவன்சர்வ தீர்த்தனெவன் - வன்றீமை ௫௭

இல்லா னெவன்யார்க்கு மீச னெவன்யாவும்
வல்லா னெவனந்தி வண்ணனெவன் - கல்லாலில் ௫௮

சுட்டகன்ற ஞான சுகாதீதங் காட்டிமுற்றும்
விட்டகன்ற யோக விநோதனெவன் - மட்டகன்ற ௫௯

அண்டங்க ளெல்லா மணுவி லடைத்தருளித்
திண்டங்கு மாறிருத்துஞ் சித்தனெவன் - பண்டங்கு ௬0

வீயாச் சிறுபெண் விளையாட்டி னண்டமெலாந்
தேயாது கூட்டுவிக்குஞ் சித்தனெவன் - யாயாதும் ௬௧

வேண்டாமை வேண்டுவது மேவாத சித்தர்தமைத்
தீண்டாது தீண்டுகின்ற சித்தனெவ - னீண்டோது ௬௨

பற்றுருவாய்ப் பற்றாப் பரவணுவி னுள்விளங்குஞ்
சிற்றுருவா யுள்ளொளிக்குஞ் சித்தனெவன் - மற்றுருவின் ௬௩

வையாது வைத்துலகை மாவிந் திரசாலஞ்
செய்யாது செய்விக்குஞ் சித்தனெவ - னையாமல் ௬௪

அப்பிடைவைப் பாமுலகி லாருயிரை மாயையெனுஞ்
செப்பிடைவைத் தாட்டுகின்ற சித்தனெவ - னொப்புறவே ௬௫

---

* மான்ற மலத்தாக்கு - எ-து, மயக்குதலைச் செய்கின்ற மலத்தி னெதிரீடு எனக்கொள்க.

நில்லாத காற்றை நிலையாக் கடத்தடைத்துச்
செல்லாது வைக்கின்ற சித்தனெவன் - பொல்லாத ௬௬

வெம்பாம்பை மேலணிந்தோர் வெம்புற்றி னுள்ளிருந்தே
செம்பாம்பை யாட்டுகின்ற சித்தனெவன் - றம்பாங்கர் ௬௭

ஒண்கையிற்றா ளொன்றின்றி யுண்ணின் றுயிர்களையூழ்த்
திண்கயிற்றா ளூட்டுகின்ற சித்தனெவன் - வண்கையுடைத் ௬௮

தானசைந்தான் மற்றைச் சகமசையு மென்றுமறைத்
தேனசையச் சொல்கின்ற சித்தனெவ - னூனமின்றிப் ௬௯

பேர்த்துயிர்க ளெல்லாமோர் பெண்பிள்ளை யின்வசமாய்ச்
சேர்த்து வருவிக்குஞ் சித்தனெவன் - போர்த்துமிக ௭0

அல்லிரவுங் காலை யகிலமெலாந் தன்பதத்தோர்
சில்விரலிற் சேர்க்கின்ற சித்தனெவன் - பல்வகையாய்க் ௭௧

கைகலந்த வன்மைக் கருப்பா சயப்பையுட்
செய்கருவுக் கூட்டுவிக்குஞ் சித்தனெவ - னுய்கருவை ௭௨

மெய்வைத்த வேர்வையினும் வீழ்நிலத்து மண்டத்துஞ்
செய்வித்தங் கூட்டுவிக்குஞ் சித்தனெவ - னுய்விக்கும் ௭௩

வித்தொன்று மின்றி விளைவித் தருளளிக்குஞ்
சித்தென்றும் வல்லவொரு சித்தனெவன் - சத்துடனே ௭௪

உற்பத்தி யாயுலகி லொன்பதுவாய்ப் பாவைகள்செய்
சிற்பத் தொழில்வல்ல சித்தனெவன் - பற்பலவாங் ௭௫

காரா ழிகளைக் கரையின்றி யெல்லையிலாச்
சேரூழி நிற்கவைத்த சித்தனெவன் - பேராத ௭௬

நீர்மே னெருப்பை நிலையுறவைத் தெவ்வுலகுஞ்
சீர்மே வுறச்செய்யுஞ் சித்தனெவன் - பாராது ௭௭

ஐந்திலைந்து நான்கொருமூன் றாமிரண்டொன் றாய்முறையே
சிந்தையுற நின்றருளுஞ் சித்தனெவன் - பந்தமுற ௭௮

ஆண்பெண்ணாய்ப் பெண்ணாணா யண்மை தனைவானிற்
சேண்பண்ண வல்லவொரு சித்தனெவன் - மாண்பண்ணாப் ௭௯

பேடாணாய்ப் பெண்ணாயப் பெண்ணாண் பெரும்பேடாய்ச்
சேடாகச் செய்யவல்ல சித்தனெவன் - சேடாய ௮0

வெண்மை கிழமாய் விருத்தமந்த வெண்மையதாய்த்
திண்மை பெறச்செய்யுஞ் சித்தனெவ - னெண்மையிலா அக

ஓட்டினைச்செம் பொன்னா யுயர்செம்பொன் னோடாகச்
சேட்டையறச் செய்கின்ற சித்தனெவன் - காட்டினுறு அஉ

காஞ்சிரத்தைக் கற்பகமாய்க் கற்பகத்தைக் காஞ்சிரமாய்த்
தேஞ்சிவணச் செய்கின்ற சித்தனெவன் - வாஞ்சையுற அங

நாரணன்சேய் நான்முகனாய் நான்முகன்சேய் நாரணனாய்ச்
சீரணவச் செய்யவல்ல சித்தனெவன் - பேரணவக் அச

கொம்மை பெறுங்கோடா கோடியண்ட மெல்லாமோர்
செம்மயிர்க்கா லுட்புகுத்துஞ் சித்தனெவன் - செம்மையிலா அரு

வெம்புலியை வெண்பால் விளைபசுவா யப்பசுவைச்
செம்புலியாய்ச் செய்யவல்ல சித்தனெவ - னம்புலியை அசு

அங்கதிரோன் செங்கதிரா யம்புலியாய்ப் பம்புகின்ற
செங்கதிரைச் செய்யவல்ல சித்தனெவன் - றுங்கமுறு அஎ

ஓரணுவோர் மாமலையா யோர்மா மலையதுவோர்
சீரணுவாய்ச் செய்யவல்ல சித்தனெவன் - வீரமுடன் அஅ

முன்னகையா னின்றதொரு முப்புரத்தை யன்றொருகாற்
சின்னகையாற் றீமடுத்த சித்தனெவன் - முன்னயன்மால் அகூ

மற்றிருந்த வானவரும் வாய்ந்தசைக்கா வண்ணமொரு
¶ சிற்றுரும்பை நாட்டிநின்ற சித்தனெவன் - மற்றவர்போல் கூ0

அல்லா வயனு மரியு முருத்திரருஞ்
செல்லா நெறிநின்ற சித்தனெவ - னெல்லாத கூக

கல்லிற் சுவையாய்க் கனியிற் சுவையிலதாய்ச்
செல்லப் பணிக்கவல்ல சித்தனெவ - னல்லலறப் கூஉ

பார்க்கின்ற யாவர்கட்கும் பாவனா தீதனெனச்
சீர்க்கின்ற மெய்ஞ்ஞானச் சித்தனெவன் - மார்க்கங்கள் கூங

ஒன்றென்ற மேலவரை யொன்றென் றுரைத்தவர்பாற்
சென்றொன்றி நிற்கின்ற சித்தனெவ - னன்றொருநாள் கூச

கல்லானை தின்னக் கரும்பளித்துப் பாண்டியன்வீண்
செல்லா தளித்தமகா சித்தனெவன் - சொல்லாத கூரு

¶ சில் - துரும்பெனப்பிரித்து-அற்பமாகிய துரும்பெனப் பொருள் கொள்க.

ஒன்றே யிரண்டேமே லொன்றிரண்டே யென்பவற்றுட்
சென்றே நடுநின்ற சித்தனெவன் - சென்றேறும் ௯௬

அத்திரத்தை மென்மலரா யம்மலரை யத்திரமாய்ச்
சித்திரத்தைப் பேசுவிக்குஞ் சித்தனெவ - னெத்தலத்துஞ் ௯௭

* சங்கமதே தாபரமாய்த் தாபரமே சங்கமதாய்ச்
செங்கையிடா தாற்றவல்ல சித்தனெவனை - றங்குகின்ற ௯௮

சத்தெல்லா மாகிச் சயம்புவா யானந்தச்
சித்தெல்லாம வல்ல சிவ சித்தனெவனை - றத்தெல்லாம் ௯௯

நீட்டாது நெஞ்ச நிலைத்தவர்க்குந் தன்னுண்மை
காட்டாது காட்டிநிற்குங் கள்வனெவன் - பாட்டோடு ௧௦௦

வண்டாலுங் கொன்றை மலரோ யெனமறைகள்
கண்டாலுங் காணாத கள்வனெவன் - றெண்டாக ௧௦௧

அள்ளஞ் செறியார்க்கே யன்றி யறிவார்க்குக்
கள்ளஞ் செறியாத கள்வனெவ - னெள்ளலறக் ௧௦௨

கொண்டவெலாந் தன்பாற் கொடுக்குமவர் தம்மிடத்திற்
கண்டவெலாங் கொள்ளைகொளுங் கள்வனெவன் - கொண்டுளத்தில் ௧௦௩

தன்னையொளிக் கின்றோர்க டம்முளொளித் துள்ளவெலாங்
கன்னமிடக் கைவந்த கள்வனெவன் - மன்னுலகைச் ௧௦௪

சற்பனைசெய் கின்றதிரோ தானமெனுஞ் சத்தியினாற்
கற்பனைசெய் தேமயக்குங் கள்வனெவன் - முற்படுமித் ௧௦௫

தொண்டிலகி லுள்ளவுயிர் தோறுமொளித் தாற்றலெலாங்
கண்டுவெவு கின்றதொரு கள்வனெவன் - விண்டகலா ௧௦௬

மண்மயக்கும் பொன்மயக்கு மாதர் மயக்குமெனுங்
கண்மயக்கங் காட்டிநிற்குங் கள்வனெவ - னுண்மயக்கு ௧௦௭

மாசு பறிக்கு மதியுடையோர் தம்முடைய
காசு பறிக்கின்ற கள்வனெவ - னாசகன்ற ௧௦௮

பெண்ணு லெவையும் பிறப்பித்து மற்றைநுதற்
கண்ணு லழிக்கின்ற கள்வனெவ - னெண்ணுது ௧௦௯

நானென்று நிற்கி னடுவேயந் நானைத்
தானென்று நிற்குஞ் சதுரனெவன் - மானென்ற ௧௧௦

* சங்கமம் - என்பது சங்கமென விகாரமாயிறறு.

மாயைதனைக் காட்டி மறைப்பித்தம் மாயையிற்றன்
சாயைதனைக் காட்டுஞ் சதுரனெவ - னேயமுடன் ககக

நான்மறையு நான்முகனு நாரணனு நாடுதொறுந்
தான்மறையு மேன்மைச் சதுரனெவன் - வான்மறையா ககஉ

முன்னை மறைக்கு முடிப்பொருளென் றுய்பவர்க்குந்
தன்னை மறைக்குஞ் சதுரனெவ - னுன்னுகின்றோர் ககங

சித்தத்திற் சுத்த சிதாகாச மென்றொருசிற்
சத்தத்திற் காட்டுஞ் சதுரனெவன் - முத்தரென ககச

யாவ ரிருந்தா ரவர்காண வீற்றிருக்குந்
தேவர் புகழ்தலைமைத் தேவனெவன் - யாவர்களும் ககரு

இவ்வணத்த னிவ்விடத்த னிவ்வியல னென்றறியாச்
செவ்வணத்த னுந்தலைமைத் தேவனெவன் - மெய்வணத்தோர் ககசு

தாம்வாழ வண்ட சராசரங்க டாம்வாழ
நாம்வாழத் தன்னுளையா நான்மறைக - டாம்வாழச் ககஎ

சாருருவி னல்லருளே சத்தியாய் மெய்யறிவின்
சீருருவே யோருருவாந் தேவனெவ - னீருருவு ககஅ

மொன்றென் றுணர வுணர்த்தி யடியருளஞ்
சென்றங் கமர்ந்தருளுந் தேவனெவ - னென்றென்றுந் ககசூ

தற்சகச மென்றே சமயஞ் சமரசமாஞ்
சிற்சபையில் வாழ்கின்ற தேவனெவன் - பிற்படுமோர் கஉ0

பொய்விட்டு மெய்ந்நெறியைப் போற்றித்தற் போதத்தைக்
கைவிட் டுணர்வே கடைப்பிடித்து - நெய்விட்ட கஉக

தீப்போற் கனலுஞ் செருக்கறவே செங்கமலப்
பூப்போலுந் தன்றுட் புணைபற்றிக் - காப்பாய கஉஉ

வெண்ணீ றணிந்து விதிர்விதிர்த்து மெய்பொடிப்பக்
கண்ணீ ரருவி கலந்தாடி - யுண்ணீர்மை கஉங

என்புருகி யுள்ளுருகி யின்பா ருயிருருகி
யன்புருகி யன்புருவ மாகிப்பின் - வன்பகன்று கஉச

புண்ணியா திங்கட் புரிசடையாய் பொன்னிதழிக்
கண்ணியா யெங்கள் கனகண்ணே - யெண்ணியாங் கஉரு

## நெஞ்சறிவுறுத்தல்.

கன்பர்க் கருளு மரசே யமுதேயே
ரின்பக் கடலே யெமதுறவே - மன்பெற்று ௧௨௬

மாற்றுரையாப் பொன்னே மணியேயெங் கண்மணியே
யேற்றுவந்த மெய்ப்பொருளே யென்றுநிதம் - போற்றிநின்றால் ௧௨௭

உள்ளூறி யுள்ளத் துணர்வூறி யவ்வுணர்வி
னள்ளூறி யண்ணித் தமுதூறித் - தெள்ளூறும் ௧௨௮

வான்போற் பரவி மதிபோற் குளிர்ந்துயர்கோற்
றேன்போன் மதுரிக்குந் தேவனெவன் - வான்போனார் ௧௨௯

மாண்கொடுக்குந் தெய்வ மடந்தையர்க்கு மங்கலப்பொன்
ஞாண்கொடுக்க நஞ்சுவந்த நாதனெவ - ஞாண்மலர்ப்பெய் ௧௩௰

தார்த்தியாய்த் தேவ ரரகரவென் றேத்தவட்ட
மூர்த்தியாய் நின்ற முதல்வனெவன - சீர்த்திபெற ௧௩௧

ஈணடற் புதவடிவா யெத்தேவ ரோனுநின்று
காண்டற் கரிதாங் கணேசனெவன் - வேண்டுற்றுப் ௧௩௨

பூமியெங்கும் வாழ்த்திப் புகழ்வார் விரும்புமிட்ட
காமியங்க ளீயுங் கணேசனெவ - ஞமியங்க ௧௩௩

ஏண வருமிடையூ றெல்லா மகற்றியருள்
காண வெமக்கீயுங் கணேசனெவன் - மாணவரு ௧௩௪

முந்த மறையின் முழுப்பொருளை நான்முகற்குத்
தந்த வருட்கடலாஞ் சாமியெவன் - றநதமக்காம் ௧௩௫

வாதகற்றி யுண்மை மரபளித்து வஞ்சமலக்
கோதகற்று நெஞ்சக் குகேசனெவன் - றீதகற்றித் ௧௩௬

தங்குமுல கங்கள் சாயாமற் செஞ்சடைமேற்
கங்கைதனைச் சேர்த்த கடவுளெவ - னெங்குறினுங் ௧௩௭

கூம்பா நிலைமைக் குணத்தோர் தொழுகின்ற
பாம்பா பரணப் பரமனெவன் - கூம்பாது ௧௩௮

போற்றுரைத்து நிற்கும் புனிதன்மேல் வந்தகொடுங்
கூற்றுதைத்த செந்தாட் குழகனெவ - ஞற்றலுறு ௧௩௯

வையந் துதிக்கு மகாலிங்க மூர்த்திமுத
லையைந்து மூர்த்தியெனு மையனெவ - னையந்தீர் ௧௪௰

வல்லார்சொல் வண்ணமெந்த வண்ணமந்த வண்ணங்க
ளெல்லா முடைய விதத்தனெவ - னெல்லார்க்குந் ௧௪௧

தாந்தலைவ ராகத்தந் தாடொழுமெத் தேவர்க்கு
மாந்தலைமை யீந்தபர மார்த்தனெவன் - போந்துயிர்கள் ௧௪௨

எங்கெங் கிருந்துமனத் தியாது விழைந்தாலு
மங்கங் கிருந்தளிக்கு மண்ணலெவன் - புங்கமிகும் ௧௪௩

அண்ணற் றிருமலர்க்கை யாழிபெறக் கண்ணிடந்த
கண்ணற் கருளியமுக் கண்ணனெவன் - மண்ணிடத்தில் ௧௪௪

ஓயாது சூன்முதிர்ந்த வோர்பெண்ட னக்காகத்
தாயாகி வந்த தயாளனெவன் - சேயாக ௧௪௫

வேற்பிடித்த கண்ணப்பன் மேவுமெச்சில் வேண்டுமிதத்
தாற்பொசித்து நேர்ந்த தயாளனெவன் - பாற்குடத்தைத் ௧௪௬

தான்றந்தை யென்றெறிந்தோன் றாளெறிந்த தண்டிக்குத்
தான்றந்தை யான தயாளனெவன் - றான்கொண்டு ௧௪௭

சம்பு நறுங்கனியின் றன்விதையைத் தாள்பணிந்த
சம்பு முனிக்கீயுந் தயாளனெவ - னம்புவியில் ௧௪௮

ஆண்டவனென் றேத்தப்பொன் னம்பலத்தி லானந்தத்
தாண்டவஞ்செய் கின்ற தயாளனெவன் - காண்டகைய ௧௪௯

முத்துச் சிவிகையின்மேல் முன்காழி யோங்குமுழு
முத்தைத் தனிவைத்த முத்தனெவன் - பத்திபெறு ௧௫௦

நாவொன் றரசர்க்கு நாந்தருவே நல்லூரில்
வாவென்று வாய்மலர்ந்த வள்ளலெவன் - பூவொன்று ௧௫௧

நன்றொண்டர் சுந்தரரை நாந்தடுக்க வந்தமையால்
வன்றொண்ட னீயென்ற வள்ளலெவ - னன்றொண்டிற் ௧௫௨

காணிக்கை யாகக் கருத்தளித்தார் தம்மொழியை
மாணிக்க மென்றுரைத்த வள்ளலெவன் - றாணிற்குந் ௧௫௩

தன்னன்பர் தாம்வருந்திற் சற்றுந் தரியாது
மன்னன்ப ருளளிக்கும் வள்ளலெவன் - முன்னன்பிற் ௧௫௪

சால்புடைய நல்லோர்க்குத் தண்ணருடந் தாட்கொளவோர்
மால்விடைமேல் வந்தருளும் வள்ளலெவன் - மான்முதலோர் ௧௫௫

தாமலையா வண்ணந் தகையருளி யோங்கும்வெள்ளி
மாமலைவாழ் கின்றவருள் வள்ளலெவ - ளுமவனே ௧௫௬

நம்மைப் பணிகொண்டு நாரணனு நாடரிதாஞ்
செம்மைக் கதியருணந் தெய்வங்கா - ணெம்மையினும் ௧௫௭

நாடக் கிடைத்த னமக்கன்றி நானமுகற்குந
தேடக் கிடையாநந் தெய்வங்கா - ணீடச்சீர் ௧௫௮

நல்வந் தனைசெய்யு நம்போல்வார்க் கோர்ஞானச்
செல்வந் தருநமது தெய்வங்காண் - சொல்வந்த ௧௫௯

எண்மைபெறு நாமுலகி லென்றும் பிறந்திறவாத்
திண்மை யளித்தருணந் தெய்வங்காண் - வண்மையுற ௧௬௦

முப்பாழ் கடந்த முழுப்பாழுக் கப்பாலைச்
செப்பாது செப்புறுநந் தேசிகன்காண் - டப்பாது ௧௬௧

தீரா விடும்பைத் திரிபென்ப தியாதொன்றுஞ்
சேரா நெறியருணந் தேசிகன்கா - ணூராது ௧௬௨

நித்தந் தெரியர் நிலைமே வியநமது
சித்தந் தெளிவிக்குந் தேசிகன்காண் - பித்தனை ௧௬௩

யாதொன்றுந் தேரா திருந்தநமக் கிவ்வுலகந்
தீதென் றறிவித்த தேசிகன்காண் - கோதின்றி ௧௬௪

ஓசைபெறு கடல்சூ ழுற்ற வுலகினம்மை
யாசை யுடனீன்ற வப்பன்காண் - மாசுறவே ௧௬௫

வன்பாய் வளர்க்கின்ற மற்றையர் போலல்லாம
லன்பாய் நமைவளர்க்கு மப்பன்கா - ணின்பாக ௧௬௬

இப்பாரிற் சேயா ரிதய மலர்ந்தம்மை
யப்பா வெனுநங்க ளப்பன்காண் - செப்பாமல் ௧௬௭

எள்ளித் திரிந்தாலு * மிந்தாவென் றின்னமுத
மள்ளிக் கொடுக்குநம தப்பன்கா - ணுள்ளிக்கொண் ௧௬௮

டின்றே யருள்வா யெனத்துதிக்கி லாங்குநமக்
கன்றே யருளுநம தப்பன்கா - ணன்றேமுன் ௧௬௯

* இந்தா - எ-து, மருஉச்சொல் - அது - இதனைத்தரப்பெற்றுக்கொள்ளென்னும் பொருட்டு. அல்லதூஉம் இங்குவாவென்னும் எளிமைக்கண்ணியவேவலுமாம்.

‡ காதரவு செய்துநலங் கற்பித்துப் பின்பெரிய
வாதரவு செய்யுநங்க ளப்பன்காண் - கோதுறுமா ௧௭

வஞ்சமலத் தால்வருந்தி வாடுகின்ற நந்தமையே
யஞ்சலஞ்ச லென்றருளு மப்பன்காண் - டுஞ்சலெனும் ௧௭௧

நச்சென்ற வாதனையை நாளுமெண்ணி நாமஞ்சு
மச்சங் கெடுத்தாண்ட வப்பன்கா - * ணிச்சலுமிங் ௧௭௨

கேயிரவு மெல்லு மெளியேம் பிழைத்தபிழை
யாயிரமுந் தான்பொறுக்கு மப்பன்காண் - சேயிரங்கா ௧௭௩

முன்ன மெடுத்தணைத்து முத்தமிட்டுப் பாலருத்து
மன்னையினு மன்புடைய வப்பன்காண் - மன்னுலகில் ௧௭௪

வன்மை யறப்பத்து மாதஞ் சுமந்துநமை
நன்மைதரப் பெற்ற நற்றாய்கா - ணிம்மைதனில் ௧௭௫

அன்றொருநா ணம்பசிகண் டந்தோ தரியாது
நன்றிரவிற் சோறளித்த நற்றாய்கா - ணென்றுமருட் ௧௭௬

செம்மையிலாச் சிறிய தேவர்கள்பாற் சேர்க்காது
நம்மை வளர்க்கின்ற நற்றாய்காண் - சும்மையென ௧௭௭

மூளும் பெருங்குற்ற முன்னிமேன் மேற்செயினு
நாளும் பொறுத்தருளு நற்றாய்காண் - மூளுகின்ற ௧௭௮

வன்னெறியிற் சென்றாலும் வாவென் றழைத்துநமை
நன்னெறியிற் சேர்க்கின்ற நற்றாய்காண் - செந்நெறியின் ௧௭௯

நாந்தேடா முன்ன நமைத்தேடிப் பின்புதனை
நாந்தேடச் செய்கின்ற நற்றாய்கா - ணாந்தோறுங் ௧௮0

கால மறிந்தே கனிவோடு நல்லருட்பான்
ஞால மிசையளிக்கு நற்றாய்காண் - சாலவுறு ௧௮௧

வெம்பிணியும் வேதனையும் வேசறிக்கை யுந்துயரு
நம்பசியுந் தீர்த்தருளு நற்றாய்கா - ணம்புவியில் ௧௮௨

வெந்நீரி லாட்டிடிலெம் மெய்நோகு மென்றருளா
நன்னீரி லாட்டுகின்ற நற்றாய்கா - ணெந்நீரின் ௧௮௩

மேலாய் நமக்கு வியனுலகி லன்புடைய
நாலா யிரந்தாயி னற்றாய்கா - ணேலாது ௧௮௪

---

‡ காதரவுசெய்தல் - எ-து, அச்சுறுத்தல். * நிச்சல் - எ-து, நாடோறும்.

வாடி யழுதாலெம் வருத்தந் தரியாது
நாடி யெடுத்தணைக்கு நற்றாய்கா - ணீடுலகில் ௧௦௫

தான்பாடக் கேட்டுத் தமியேன் களிக்குமுன்ன
நான்பாடக் கேட்டுவக்கு நற்றாய்காண் - வான்பாடும் ௧௦௬

ஞானமணஞ் செய்யருளா நங்கைதனைத் தந்துநமக்
கானமணஞ் செய்விக்கு மம்மான்காண் - டேனிறைடும் ௧௦௭

இன்பா லமுதாதி யேக்கமுற வின்னருள்கொண்
டன்பால் விருந்தளிக்கு மம்மான்காண் - வன்பாவ ௧௦௮

வாழ்கடல்வீழ்ந் துள்ள மழுந்து நமையெடுத்துச்
சூழ்கரையி லேற்றுந் துணைவன்காண் - வீழ்ந்துணத்தால் ௧௦௯

இன்ப மெனைத்து மிதுவென் றறியாநந்
துன்பந் தொலைக்குந் துணைவன்காண் - வன்பவமாந் ௧௧௦

தீநெறியிற் சென்று தியங்குகின்ற நந்தமக்குத்
தூநெறியைக் காட்டுந் துணைவன்காண் - மாநிலத்தில் ௧௧௧

இன்று தொட்ட தன்றி யியற்கையாய் நந்தமக்குத்
தொன்றுதொட்டு வந்தவருட் சுற்றங்காண் - டொன்றுதொட்டே ௧௧௨

ஆயுமுடற் கன்புடைத்தா மாருயிரிற் றுன்சிறந்த
நேயம்வைத்த நம்முடைய நேசன்காண் - பேயரென ௧௧௩

வாங்காது நாமே மறந்தாலு நம்மைவிட்டு
நீங்காத நம்முடைய நேசன்காண் - டீங்காக ௧௧௪

ஈட்டுகின்ற வாபத்தி லிந்தா வெனவருளை
நீட்டுகின்ற நம்முடைய நேசன்காண் - கூட்டுலகிற் ௧௧௫

புல்லென்ற மாயையிடைப் போந்தோறு நம்மையிங்கு
நில்லென் றிருத்துகின்ற நேசன்காண் - சில்லென்றென் ௧௧௬

உட்டேவுந் தன்னைமறந் துண்டாலு மற்றதற்கு
நிட்டூரஞ் செய்யாத நேசன்கா - *ணட்டேர்ந்து ௧௧௭

வஞ்சமது நாமெண்ணி வாழ்ந்தாலுந் தான்சிறிது
நெஞ்சிலது வையாத நேசன்கா - ணைஞ்சலிலாப் ௧௧௮

பார்நின்ற நாங்கிடையாப் பண்டமெது வேண்டிடினு
நேர்நின் றளித்துவரு நேசன்கா - ணூர்வமுடன் ௧௧௯

---

* நட்டு-ஊர்ந்து-எனப்பிரித்து-நேசித்துச்சென்று-எனப்பொருள்கொள்க.

ஆர்ந்தநமக் கிவ்விடத்து மவ்விடத்து மெவ்விடத்துஞ்
சேர்ந்தவுயிர் போற்கிடைத்த நேசன்காண் - சேர்ந்துமிகத் உ00

தாபஞ்செய் குற்றந் தரினும் பொறுப்பதன்றிக்
கோபஞ் செயாநமது கோமான்காண் - பாபமற உ0க

விள்ளுமிறை நாமன்பு மேவலன்றி வேற்றரசர்
கொள்ளுமிறை வாங்காநங் கோமான்கா - ணுள்ளமுற உ0உ

உண்டளிக்கு மூணுடைப்பூ ணூரா திடாதே
கொண்டுநமக் கிங்களிக்குங் கோமான்காண் - மண்டலத்தில் உ0௩

ஒன்றாலு நீங்கா துகங்கள் பலபலவாய்ச்
சென்றாலுஞ் செல்லாநஞ் செல்வங்காண் - முன்றவி உ0ச

நாடிவைக்கு நல்லறிவோர் நாளுந் தவம்புரிந்து
தேடிவைத்த நம்முடைய செல்வங்காண் - மாடிருந்து உ0ரு

நாமெத் தனைநாளு நல்கிடினுந் தானுலவாச்
சேமித்த வைப்பின் றிரவியங்காண் - பூமிக்கண் உ0௬

ஈங்குறினும் வானுறி யாங்குறினும் விட்டகலா
தோங்கருளா னம்மை யுடையவன்கா - ணோங்கவன்றன் உ0எ

கங்கைச் சடையழகுங் காதன்மிகு மச்சடைமேற்
றிங்கட் கொழுந்தின் றிருவழகுந் - திங்கடன்மேற் உ0அ

சார்ந்திலங்குங் கொன்றை மலர்த் தாரழகு மத்தார்மே
லார்ந்திலங்கும் வண்டி னணியழகுந் - தேர்ந்தவர்க்கும் உ0௯

நோக்கரிய நோக்கழகும் நோக்கார் நுதலழகும்
போக்கரிய நன்னுதலிற் பொட்டழகுந் - தேக்குதிரி உக0

புண்டரத்தி னல்லழகும் பொன்னருடான் றன்னெழிலைக்
கண்டவர்பா லூற்றுகின்ற கண்ணழகுந் - தொண்டர்கடம் உகக

நேசித்த நெஞ்சமலர் நீடு மணமுகந்த
நாசித் திருக்குமிழி னல்லழகுந் - தேசுற்ற உகஉ

முல்லை முகையா முறுவலழகும் பவள
வெல்லை வளர்செவ் விதழழகு - நல்லவரைத் உக௩

தேவென்ற தீம்பாலிற் றேன்கலந்தாற் போலினிக்க
வாவென் றருளுமலர் வாயழகும் - பூவொன்றும் உகச

கோன்பரவுஞ் சங்கக் குழையழகு மன்பர்மொழித்
தேன்பரவும் வள்ளைச் செவியழகு - நான்பரவி ௨௧௫

வேட்டவையை நின்றாங்கு விண்ணப்பஞ் செய்யவது
கேட்டருளும் வார்செவியின் கேழழகு - நாட்டிலுயர் ௨௧௬

சைவ முதலாய்த் தழைக்க வருள்சுரக்குந்
தெய்வ முகத்தின் றிருவழகுந் - தெய்வமுகத் ௨௧௭

துள்ளங் குளிர வுயிர்குளிர மெய்குளிரக்
கொள்ளுங் கருணைக் குறிப்பழகு - முள்ளறிவின் ௨௧௮

எள்ளாத மேன்மையுல கெல்லாந் தழைப்பவொளிர்
தெள்ளா ரமுதச் சிரிப்பழகு - முள்ளோங்குஞ் ௨௧௯

சீல வருளின் றிறத்துக் கிலச்சினையா
நீல மணிமிடற்றி னீடழகு - மாலகற்றி ௨௨௦

வாழ்ந்தொளிரு மன்பர் மனம்போலும் வெண்ணீறு
சூழ்ந்தொளிகொண் டோங்குதிருத் தோளழகுந் - தாழ்ந்திலவாய்த் ௨௨௧

தானோங்கு மண்டமெலாஞ் சத்தமுறக் கூவுமொரு
மானோங்குஞ் செங்கை மலரழகு - மூனோங்கும் ௨௨௨

ஆணவத்தின் கூற்றை யழிக்க வொளிர்மழுவைக்
காணவைத்த செங்கமலக் கையழகு - நாணமுற்றே ௨௨௩

ஒங்கும் பரிசுடைய வெம்போல்வா ரச்சமெலாம்
வாங்கு மபய மலரழகுந் - தீங்கடையாச் ௨௨௪

சீர்வரவு மெல்லாச் சிறப்பும் பெறவுமருள்
சார்வரத வொண்கைத் தலத்தழகும் - பேரரவப் ௨௨௫

பூணிலங்க வெண்பொற் பொடியிலங்க வென்பணித்தார்
மாணிலங்க மேவுதிரு மார்பழகுஞ் - சேணிலத்தர் ௨௨௬

மேலுடுத்த வாடையெலாம் வெஃக வியாக்கிரமத்
தோலுடுத்த வொண்மருங்கிற் றன்னழகும் - பாலடுத்த ௨௨௭

கேழ்க்கோல மேவ்திருக் கீளழகு மக்கீளின்
கீழ்க்கோ வணத்தின் கிளரழகுங் - கீட்கோலம் ௨௨௮

ஒட்டிநின்ற மெய்யன்ப ருள்ள மெலாஞ்சேர்த்துக்
கட்டிநின்ற வீரக் கழலழகு - மெட்டிரண்டுஞ் ௨௨௯

சித்திக்கும் யோகியர்தஞ் சிந்தைதனிற் றேன்போன்று
தித்திக்குஞ் சேவடியின் சீரழகுஞ் - சத்தித்து ௨௩0

மல்வைத்த மாமறையு மாலயனுங் காண்பரிய
செல்வத் திருவடியின் சீரழகுஞ் - சொல்வைத்த ௨௩௧

செம்மை மணிமலையைச் சேர்ந்த மரகதம்போ
லம்மை யொருபால்வாழ்ந் தருளழகு - மம்மைமிகச் ௨௩௨

சீர்த்திதிகழ் செம்பவளச் செம்மே னியினழகும்
பார்த்திருந்தா னம்முட் பசிபோங்காண் - டீர்த்தருளங் ௨௩௩

கொண்டிருந்தான் பொன்மேனிக் கோலமதை நாந்தினமுங்
கண்டிருந்தா லல்லலெலாங் கட்டறுங்காண் - டொண்டடைந்து ௨௩௪

பாட்டா லவன்புகழைப் பாடுகின்றோர் பக்கநின்று
கேட்டால் வினைகள்விடை கேட்குங்கா - ணீட்டாமல் ௨௩௫

ஒன்னார் புரம்பொடித்த வுத்தமனே யென்றொருகாற்
சொன்னா லுலகத் துயரறுங்கா - ணெந்நாளும் ௨௩௬

பன்னுமுள்ளத் துள்ளாம் பரசிவமே யென்றொருகா
லுன்னுமுன்னந் தீமையெலா மோடிடுங்கா - ணன்னவன்றன் ௨௩௭

ஆட்டியல்காற் பூமாட் டடையென்று லந்தோமுன்
னீட்டியகாற் பின்வாங்கி நிற்கின்று - யூட்டுமவன் ௨௩௮

மாற்கடவு ளாமோர் மகவலறக் கண்டுதிருப்
பாற்கடலை யீந்தவருட் பான்மைதனை - நூற்கடலின் ௨௩௯

மத்தியினீ கேட்டும் வணங்குகிலா யன்படையப்
புத்தியுளோர்க் கிதொன்றும் போதாதோ - முத்திநெறி ௨௪0

மாறு வரக்கன் மலைக்கீ ழிருந்தேத்த
* வாணாள் வழங்கியதோர் வண்மைதனை - நாணாளும் ௨௪௧

நண்ணி யுரைத்து நயந்திலைநீ யன்புகொளப்
புண்ணியருக் கிதொன்றும் போதாதோ - புண்ணியராஞ் ௨௪௨

சுந்தரர்க்குக் கச்சூரிற் றோழமையைத் தான்றெரிக்க
வந்திரப்புச் சோறளித்த வண்மைதனை - முந்தகத்திற் ௨௪௩

---

* வாழ்நாள் - வாணாளெனமரீஇயது.

பேதமறக் கேட்டும் பிறழ்ந்தனையே யன்படையப்
போதமுளோர்க் கிதொன்றும் போதாதோ - போதவுநெய் ௨௪௪

அங்கோ ரொலிதா னருந்தவகற் றூண்டவதைச்
செங்கோல னுக்கியவச் சீர்த்திதனை - யிங்கோதச் ௨௪௫

சந்ததநீ கேட்டுமவன் றுணிவினையா யன்படையப்
புந்தியுளோர்க் கிதொன்றும் போதாதோ - முந்தவரு ௨௪௬

நற்றுணையென் றோத்துமந்த நாவரசர்க் கன்றுகடற்
* கற்றுணையோர் தெப்பமெனக் காட்டியதை - யிற்றெனநீ ௨௪௭

மாவுலகிற் கேட்டும் வணங்குகிலா யன்படையப்
பூவுலகர்க் கிதொன்றும் போதாதோ - தாவுறுதற் ௨௪௮

கண்சுமந்தா னன்பன் கலங்கா வகைவைகை
மண்சுமந்தா னென்றுரைக்கும் வாய்மைதனைப் - பண்புடையோர் ௨௪௯

மாணவுரைப் பக்கேட்டும் வாய்ந்தேத்தாய் மெய்யன்பு
பூணவென்று லிதொன்றும் போதாதோ - நீணரகத் ௨௫௰

தீங்குறுமா பாதகத்தைத் தீர்த்தோர் மறையவனைப்
பாங்கடையச் செய்தவருட் பண்பதனை - யீங்குலகர் ௨௫௧

தூங்கமுற வுரைத்துஞ் சூழ்கின் றிலையன்பு
பொங்கவென்று லிதொன்றும் போதாதோ - தங்கியவிப் ௨௫௨

பாரறியாத் தாயாகிப் பன்றிக் குருளைகட்கு
ஆரறியநன் முலைப் பாலூட்டியதைச் - சேரறிவோர் ௨௫௩

சொல்லிநின்றார் கேட்டுந் துதிக்கின் றிலையன்பு
புல்லவென்று லிதொன்றும் போதாதோ - நல்லதிருப் ௨௫௪

பாதமலர் வருந்தப் பாணன்றனக் காளாய்க்
கோதில் விறகேற்று விலைகூறியதை - நீதியுளோர் ௨௫௫

சாற்றிநின்றார் கேட்டுமவன் றுணிவினையாய் மெய்யன்பிற்
போற்றவென்று லிதொன்றும் போதாதோ - போற்றுகின்ற ௨௫௬

ஆடுங் கரியு மணிலுங் குரங்குமன்பு
தேடுஞ் சிலம்பியொடு சிற்றெறும்பு - நீடுகின்ற ௨௫௭

---

* கற்றுணை - எ-து - கற்றுணையெனக்குறுகிநின்றது.

பாம்புஞ் சிவார்ச்சனை தான் பண்ணியதென் றூற்பூசை
யோம்புவதற் கியார்தா னுவவாதார் - சோம்புறநீ உ௫அ

வன்பென்ப தெல்லா மறுத்தவன்றாட் பூசிக்கு
மன்பென்ப தியாதோ வறியாயே - யன்புடனே உ௫கூ

செஞ்சடைகொ ணம்பெருமான் சீர்கேட் டிரையருந்தா
தஞ்சடக்கி யோகம மார்ந்துலகின் - வஞ்சமற உ௬0

நாரையே முத்தியின்ப நாடியதென் றூன்மற்றை
யாரையே நாடாதா ரென்றுரைப்பே - னீரமிலாய் உ௬க

நீயோ சிறிது நினைந்திலையவ் வின்பமென்னை
யேயோநின் றன்மை யிருந்தவித - மோயாத உ௬உ

அன்புடையா ரியாரினும்பே ரன்புடையா னம்பெருமா
னின்புடையா னித்த நிகழ்த்துகின்றே - னுன்புடையோர் உ௬ங

அன்பவன்மேற் கொண்ட தறியேன் புறச்சமயத்
தின்புடையா ரோனு மிணங்குவரோ - யன்புடனே உ௬ச

தாவென்று னல்லருளிந் தாவென்பா னம்பெருமா
னாவுன்பா லோதி யலுக்கின்றே - னீவன்பால் உ௬௫

நின்று யலதவனை நேர்ந்துநினை யாய்பித்த
னென்றூனு மென்சொற் கிணங்குவரோ - குன்றாது உ௬௬

பித்தா வெனினும் பிறப்பறுப்பா னம்முடையா
*னத்தோ வுனக்கி தறைகின்றேன் - சற்றேனுங் உ௬எ

கேள்வியிலார் போலதனைக் கேளாய் கெடுகின்றாய்
வேள்வியிலார் கூட்டம் விழைகின்றாய் - வேள்வியென்ற உ௬அ

வேலைவருங் காலொளித்து மேவுகின்றாய் நின்றலைக்கங்
கோலைவருங் காலிங் கொளிப்பாயே - மாலையுறும் உ௬கூ

இப்பார் வெறும்பூ விதுநயவே லென்றுனக்குச்
செப்பா முனம்விரைந்து செல்கின்றாய் - யப்பாழிற் உஎ0

செல்லாதே சைவநெறி செல்லென்று லென்னுடனுஞ்
சொல்லாது போய்மயக்கந் தோய்கின்றாய் - பொல்லாத உஎக

---

* அந்தோ-எ-து, அத்தோவென வலிக்கும் வழிவலித்தது.

* அஞ்சருந்தென் றாலமுதி னார்கின்றாய் விட்டிடென்றா
னஞ்சருந்தென் றாற்போ னலிகின்றாய் - வஞ்சகத்தில் ௨௭௨

ஓடுகின்றாய் மீளாம லுன்னிச்சை யின்வழியே
யாடுகின்றாய் மற்றங் கயர்கின்றாய் - நீடுலகைச் ௨௭௩

சூழ்கின்றாய் வேறொன்றிற் சுற்றுகின்றாய் மற்றொன்றில்
வீழ்கின்றாய் மேலொன்றின் மீள்கின்றாய் - தாழ்வொன்றே ௨௭௪

ஈகின்றாய் வன்னெறியி லென்னை வலதழிக்கப்
போகின்றாய் மீட்டும் புகுகின்றா - யோகின்றி ௨௭௫

ஒன்றைமறக் கின்றாய்மற் றொன்றைநினைக் கின்றாயென்
னன்றைமறைக் கின்றாய் நலிகின்றாய் - வென்றிபெறுஞ் ௨௭௬

சேவிற் பரமன்றாட் சேரொன்றான் மற்றொருசார்
மேவிப் பலவாய் விரிகின்றாய் - பாவித்துக் ௨௭௭

குன்றுமுனக் கனந்தங் கோடிதெண்ட னிட்டாலு
மொன்று மிரங்கா யுழல்கின்றாய் - நன்றுருகாக் ௨௭௮

கல்லென்பே னுன்னைக் கரணங் கலந்தறியாக்
கல்லென்றா லென்சொற் கடவாதே - புல்லநினை ௨௭௯

வல்லிரும்பென் பேனந்த வல்லிரும்பேற் கூடத்திற்
கொல்லன் குறிப்பைவிட்டுக் கோணாதே - யல்லலெலாங் ௨௮௰

கூட்டுகின்ற வன்மைக் குரங்கென்பே னக்குரங்கே
லாட்டுகின்றோன் சொல்வழிவிட் டாடாதே - நீட்டுலகர் ௨௮௧

ஏசுகின்ற பேயென்பே னப்பேயு மஞ்செழுத்தைப்
பேசுகின்றோர் தம்மைப் பிடியாதே - கூசுகிற்பக் ௨௮௨

கண்டோரைக் கவ்வுங் கடுஞ்சுணங்க னென்பனது
கொண்டோரைக் கண்டாற் குலையாதே - யண்டார்க்கும் ௨௮௩

பூவி லடங்காப் புலியென்பே னப்புலியு
மேவில் வயப்பட்டா லெதிராதே - நோவியற்றி ௨௮௪

---

* ஐந்து-எ-து, அஞ்சு என மருவிற்று-அஃதீண்டாகு பெயராய்ச்-சுவை-ஒளி-ஊறு-ஓசை-நாற்றமென்னு மைந்தாசைகளைக்குறித்து நின்றது.

வீறுகின்ற மும்மதமால் வெற்பென்பே னுங்கதுவு
மேறுகின்றேன் சொல்வழிவிட் * டேறுதே - சீறுகின்ற உ௫௫

† வென்னடைசேர் மற்றை விலங்கென்பே னெவ்விலங்கு
மன்னவன்சேர் நாட்டில் வழங்காதே - நின்னையினி உ௫௬

என்னென்பே னென்மொழியை யேற்றனையேன் மாற்றுயர்ந்த
பொன்னென்பே னென்வழியிற் போந்திலையே - கொன்னுறநீ உ௫௭

போம்வழியும் பொய்நீ புரிவதுவும் பொய்யதனு
லாம்விளைவும் பொய்நின் னறிவும்பொய் - தோம்விளைக்கும் உ௫௮

நின்னுடலும் பொய்யிங்கு நின்றவமும் பொய்நிலையா
நின்னிலையும் பொய்யன்றி நீயும்பொய் - யென்னிலிவண் உ௫௯

ஏதுமுணர்ந் திலையே யிம்மாய வாழ்க்கையெனும்
வாதி லிழுத்தென்னை மயக்கினையே - தீதுறுநீ உ௬௦

வன்னோர் விடங்காணின் வன்பெயரின் முன்பொருகீற்
றென்னே யறியாம லிட்டழைத்தேன் - கொன்னேநீ உ௬௧

நோவ தொழியா ‡ நொறிற்காம வெப்பினிடை
யாவ தறியா தழுந்தினையே - மேவுமதில் உ௬௨

உள்ளெரிய மேலா முணர்வுங் கருகவுட
னள்ளெரிய நட்பி னலம்வெதும்ப - விள்வதின்றி உ௬௩

வாடிப் பிலஞ்சென்று வான்சென் றொளித்தாலுந்
தேடிச் சுடுங்கொடிய தீக்கண்டா - யோடியங்கு உ௬௪

பேர்ந்தா லலது பெருங்காமத் தீநின்னைச்
சேர்ந்தா ரையுஞ்சுடுஞ்செந் தீக்கண்டாய் - சார்ந்தாங்கு உ௬௫

சந்தி யெனவருவார் தம்மைச் சுடுங்காமஞ்
செந்தீ யையுஞ்சுடுமோர் தீக்கண்டாய் - வந்தீங்கு உ௬௬

மண்ணிற் றனைக்காணு வண்ண நினைத்தாலு
நண்ணித் தலைக்கேறு நஞ்சங்கா - ணெண்ணற்ற உ௬௭

---

* ஏறுதல் - எ-து, ஈண்டொழுக்கத்தின்மே னின்றது. † வெல் - நடையெனப் பிரித்துக்கொள்க. அற்றேல் - கொடுநடையெனப்பொருள் கொள்ளின் - வெந்நடையெனப் பொதுநகரமாக்கிக்கொள்க.

‡ நொறில் - எ-து, விரைவு.

போருறுமுட் காமப் புதுமயக்க நின்னுடைய
பேரறிவைக் கொள்ளைகொளும் பித்தங்காண் - சோரறிவிற் ௨௯௮

கள்ளடைக்குங் காமக் கடுமயக்க மெய்ந்நெறிக்கோர்
முள்ளடைக்கும் பொல்லா முரண்கண்டா - யள்ளளூற ௨௯௯

ஏதமெலாந் தன்னு ளிடுங்காமம் பாதகத்தின்
பேதமெலா மொன்றிப் பிறப்பிடங்கா - ணாதலினால் ௩௦௦

வெம்மான் மடந்தையரை மேவவொணா தாங்கவர்க
டம்மாசை யின்னுந் தவிர்ந்திலையே - யிம்மாய ௩௦௧

மன்ற வணங்கினர்செவ் வாய்மடவார் பேதையர்க
ளென்றகொடுஞ் சொற்பொருளை யெண்ணிலையே - தோன்றுலகிற் ௩௦௨

பெண்ணொன் றுரைப்பிற் பிறப்பேழு மாந்துயர
மெண்ணென்ற நல்லோர்சொ லெண்ணிலையே - பெண்ணிங்கு ௩௦௩

* மாமாத் திரையின் வருத்தனமென் றெண்ணினையந்
நாமார்த்த மாசையென நாடிலையே - யாமார்த்தம் ௩௦௪

மந்திரத்தும் பூசை மரபினுமற் றெவ்விதமாந்
தந்திரத்துஞ் சாயாச் சழக்கன்றோ - மந்திரத்திற் ௩௦௫

பேய்பிடித்தாற் றீர்ந்திடுமிப் பெண்பேய் விடாதேசெந்
நாய்பிடித்தாற் போலுமென்று நாடிலையே - யாய்விலுன்றன் ௩௦௬

ஏழைமையென் னென்பே னிவர்மயக்கம் வன்னரகின்
றோழமையென் றந்தோ துணிந்திலையே - யூழமைந்த ௩௦௭

காரிருளிற் செல்லக் கலங்குகின்றாய் மாதர்குழற்
பேரிருளிற் செல்வதனைப் பேர்த்திலையே - பாரிடையோர் ௩௦௮

எண்வா ளெனிலஞ்சி யேகுகின்றா யேந்திழையார்
கண்வா ளறுப்பக் கனிந்தனையே - மண்வாழும் ௩௦௯

ஓரானை யைக்கண்டா லோடுகின்றாய் மாதர்முலை
யீரானை யைக்கண் டிசைந்தனையே - சீரான ௩௧௦

வெற்பென்றா லேற விரைந்தறியாய் மாதர்முலை
வெற்பென்றா லேற விரைந்தனையே - பொற்பொன்றுஞ் ௩௧௧

* பெண்ணிங்குமா மாத்திரையின் வருத்தனமென் றெண்ணினை-என்பதற்கு- பேண்-என்று-பொருள் கொண்டனை யென்பது பொருள்.

சிங்கமென் றால் வாடித் தியங்குகின் றாய் மாதரிடைச்
சிங்கமெனிற் காணத் திரும்பினையே - யிங்குசிறு ௩கஉ

பாம்பென்றோ டிப் பதுங்குகின்றாய் மாதரல்குற்
பாம்பென்றாற் சற்றும் பயந்திலையே - யாம்பண்டைக் ௩க௩

கீழ்க்கடலி லாடென்றாற் கேட்கிலைநீ மாதரல்குற்
பாழ்க்கடலிற் கேளாது பாய்ந்தனையே - கீழ்க்கதுவுங் ௩கச

கல்லென்றாற் பின்னிடுவாய் காரிகையார் காற்சிலம்பு
கல்லென்றான் மேலெழும்பக் கற்றனையே - யல்லளகம் ௩க௫

மையோ கருமென் மணலோவென் பாய்மாறி
யையோ நரைப்ப தறிந்திலையோ - பொய்யோதி ௩கசு

ஒண்பிறையே யொண்ணுதலென் றுன்னுகின்றா யுள்ளொளும்பாம்
வெண்பிறையன் றேயதனை விண்டிலையே - கண்புருவம் ௩கஎ

வில்லென்றாய் வெண்மயிராய் மேவி யுதிர்ந்திடுங்காற்
சொல்லென்றாற் சொல்லத் துணியாயே - வல்லம்பிற் ௩கஅ

கட்கு வலையென்றாய்க் கண்ணீ ருலர்ந்துமிக
வுட்குழியும் போதி லுரைப்பாயே - கட்குலவு ௩கக

மெய்க்குமிழே நாசியென வெஃகினையால் வெண்மலத்தா
லுய்க்குமிழுஞ் சீந்த லுளதேயோ - வெய்த்தலிலா ௩உ0

வள்ளையென்றாய் வார்காது வள்ளைதனக் குட்புழையோ
டுள்ளுநரம் பின்புனைவு முண்டேயோ - வெள்ளைநகை ௩உக

முல்லையென்றாய் முல்லை முறித்தொருகோற் கொண்டுநித
மொல்லை யழுக்கெடுப்ப துண்டேயோ - நல்லதொரு ௩உஉ

கொவ்வையென விதழைக் கொள்கின்றாய் மேற்குழம்புஞ்
செவ்வை யிரத்தமெனத் தேர்ந்திலையே - செவ்வியகண் ௩உ௩

ணாடி யெனக்கவுட்கே யாசைவைத்தாய் மேற்செழுந்தோல்
வாடியக்கா லென்னுரைக்க மாட்டுவையே - கூடியதோர் ௩உச

அந்த மதிமுகமென் றுகின்றாயேழ்துளைக
ளேந்தமதிக் குண்டதனை யெண்ணிலையே - நந்தெனவே ௩உ௫

கண்டமட்டுங் கூறினையக் கண்டமட்டு மன்றியுடல்
கொண்டமட்டு மற்றதன்மெய்க் கூறன்றோ - விண்டவற்றைத் ௩உசு

தோளென் றுரைத்துத் துடிக்கின்ற யவ்வேய்க்கு
மூளொன்று வெள்ளெலும்பின் மூட்டுண்டே - நாளொன்றுஞ் ௩௨௭

செங்காந்த ளங்கையெனச் செப்புகின்ற யம்மலர்க்குப்
பொங்காப் பலவிரலின் பூட்டுண்டே - மங்காத ௩௨௮

செவ்விளநீர் கொங்கையெனச் செப்பினைவல் லூன்றடிப்பிங்
கெவ்விளநீர்க் குண்டதனை யெண்ணிலையே - செவ்வைபெறுஞ் ௩௨௯

செப்பென் றனைமுலையைச் சீசீ சிலந்தியது
துப்பென் றவர்க்கியாது சொல்லுதியே - * வப்பிறுகச் ௩௩௦

சூழ்ந்தமுலை மொட்டென்றே துள்ளுகின்றாய் கீழ்த்துவண்டு
வீழ்ந்தமுலைக் கென்ன விளம்புதியே - தாழ்ந்தவவை ௩௩௧

மண்கட்டும் பந்தெனவே வாழ்ந்தாய் முதிர்ந்துடையாப்
புண்கட்டி யென்பவர்வாய்ப் † பொத்துவையே - திண்கட்டும் ௩௩௨

அந்நீர்க் கரும்பை யவையென்றாய் மேலெழும்புஞ்
செந்நீர்ப் புடைப்பென்பார் தேர்ந்திலையே - யந்நீரார் ௩௩௩

கண்ணீர் தரும்பருவாய்க் கட்டுரைப்பார் சான்றாக
வெண்ணீர் வரல்கண்டும் வெட்கிலையே - தண்ணீர்மைச் ௩௩௪

சாடியென்பாய் நீயடலோர் தாறுக் கடத்திடுமேன்
மூடியென்பார் மற்றவர்வாய் மூடுதியோ - ‡ மேடதனை ௩௩௫

ஆலிலையே யென்பா யடர்குடரோ § டீருளொடுந்
தோலிலையே யாலிலைக்கென் சொல்லுதியே - நூலிடைதான் ௩௩௬

உண்டோ விலையோவென் றுட்புகழ்வாய் கைதொட்டுக்
கண்டோர் || பூட் டுண்டென்பார் கண்டிலையே - விண்டோங்கும் ௩௩௭

ஆழ்ங்கடலென் பாய்மடவா ரல்குலினைச் சிற்சிலர்கள்
பாழ்ங்கிணறென் பாரதனைப் பார்த்திலையே - தாழ்ங்கொடிஞ்சித் ௩௩௮

தேராழி யென்பாயச் சீக்குழியை யன்றுசிறு
நீராழி யென்பவர்க்கென் ¶ னேருதியே - யாராப்புன் ௩௩௯

---

* வம்பு - வப்பென விகார மாயிற்று. † பொத்துதல் - எ-து, மூடுதல்.

‡ மேடு-எ-து, வயிறு. § ஈருள் - எ-து, ஈரலென மரீஇ வழங்கியது. || பூட்டு, எ-து, ஈண்டுடற் பொருத்து. ¶ நேர்த லென்ப தீண்டு விடை கொடுத்த லென்னு ம்பொருட்டு.

நீர்வழியை யாசை நிலையென்றாய் வன்மலந்தான்
சோர்வழியை யென்னென்று சொல்லுதியே - சார்முடைதான் ௩௪0

ஆறாச் சிலைநீர்கா ணாறா யொழுக்கிடவும்
வீறாப்புண் ணென்று விடுத்திலையே - யூறாக்கை ௩௪௧

மூலை யெறும்புடனீ மொய்ப்பதஞ்சி மற்றதன்மேற்
சீலையிடக் கண்டுந் தெரிந்திலையே - மேலையுறு ௩௪௨

மேநரக மென்றால் விதிர்ப்புறு நீமாதரல்குற்
கோநரக மென்றாற் குலைந்திலையே - யூனமிதைக் ௩௪௩

கண்டா னமதாசைக் கைவிடுவா ரென்றதனைத்
தண்டா தொளித்திடவுஞ் சார்ந்தனையே - யண்டாது ௩௪௪

போத விடாயாகிப் புலம்புகின்றாய் மற்றதன்பான்
மாதவிடா யுண்டான் மதித்திலையே - மாதரவர் ௩௪௫

தங்குறங்கை மெல்லரம்பைத் தண்டென்றாய் தண்டேன்றி
வெங்குரங்கின் மேவுங்கால் விள்ளுதியே - நன்கிலவாய் ௩௪௬

ஏய்ந்த முழந்தாளைவரா லென்றாய் புலாற்சிறிதே
வாய்ந்து வராற்றேற்கு மதித்திலையே - சேர்ந்தவடி ௩௪௭

தண்டா மரையென்றாய் தன்மை விளர்ப்படைந்தால்
வெண்டா மரையென்று மேவுதியோ - வண்டாரா ௩௪௮

மேனாட்டுஞ் சண்பகமே மேனியென்றாய் தீயிடுங்காற்
றீநாற்றஞ் சண்பகத்திற் றேர்ந்தனையோ - வானாட்டு ௩௪௯

மின்றேர் வடிவென்றாய் மேனீ யுளாத்தவுளீ
தொன்றே *யொருபுடையா யொத்ததுகா - ணென்றாச்சொல் ௩௫0

வேள்வா கனமென்றாய் வெய்யநமன் விட்டிடுந்தூ
தாள்வா கனமென்றா லாகாதோ - வேளாளேன் ௩௫௧

† காகளமா யின்குரலைக் கட்டுரைத்தாய் காலனென்போன்
காகளமென் பார்க்கென் கழறுதியே - நாகளவுஞ் ௩௫௨

சாயைமயி லென்றே தருக்குகின்றாய் சார் ‡ பிரம
சாயையஃ தென்பார்க்கென் சாற்றுதியே - சேயமலர் ௩௫௩

---

* ஈண்டொரு புடை யொத்தமை தோற்றியாங்கழியு நிலையின்மை யானென்று கொள்க. † வேளாளேன்காகளம் - எ-து, குயில்.

‡ பிரமசாயை - எ-து, பிரமகத்தி.

அன்னநடை யென்பா யஃதன் றருந்துகின்ற
வன்னநடை யென்பார்க்கென் றுற்றதியே - யன்னவரை ௱௫௪

ஓரோ வியமென்பா யோவியமே லாங்கெழுபத்
தீரா யிரநாடி யாண்டுடைத்தே - பாரார்ந்த ௱௫௫

முன்னுமலர்க் கொம்பென்பாய் மூன்றரைக் கோடியெனத்
துன்னு முரோமத் துவாரமுண்டே - யின்னமுதாற் ௱௫௬

செய்தவடி வென்பாயச் செய்கைமெய்யே னீயவர்கள்
வைதிடினு மற்றதனை வையாயே - பொய்தவிராய் ௱௫௭

ஒள்ளிழையார் தம்முருவோ ருண்கரும்பென் றுய்சிறிது
கிள்ளியெடுத் தாலிரத்தங் கீழ்வருமே - கொள்ளுமவர் ௱௫௮

ஈடில்பெயர் நல்லா ரெனநயந்தாய் நாய்ப்பெயர்தான்
கேடில்பெருஞ் சூரனென்பர் கேட்டிலையோ - நாடிலவர் ௱௫௯

மெல்லியலா ரென்பாய் மிகுகருப்ப வேதனையை
வல்லியலார் யார்பொறுக்க வல்லார்காண் - வில்லியல்பூண் ௱௬௰

வேய்ந்தா லவர்மேல் விழுகின்றாய் வெந்தீயிற்
பாய்ந்தாலு மங்கோர் பலனுண்டே - வேய்ந்தாங்கு ௱௬௧

சென்றா லவர்பின்னர்ச் செல்கின்றாய் வெம்புலிப்பின்
சென்றாலு மங்கோர் திறனுண்டே - சென்றாங்கு ௱௬௨

நின்றா லவர்பின்னர் நிற்கின்றாய் கண்மூடி
நின்றாலு மங்கோர் நிலையுண்டே - யொன்றாது ௱௬௩

கண்டா லவருடம்பைக் *கட்டுகின்றாய் கல்லணைத்துக்
கொண்டாலு மங்கோர் குணமுண்டே - பெண்டானார் ௱௬௪

வைதாலுந் தொண்டு வலித்தாய் பிணத்தொண்டு
செய்தாலு மங்கோர் சிறப்புளதே - கைதாவி ௱௬௫

மெய்த்தாவுஞ் செந்தோன் மினுக்கான் மயங்கினை நீ
செத்தாலு மங்கோர் சிறப்புளதே - வைத்தாடும் ௱௬௬

மஞ்சண் மினுக்கான் மயங்கினை நீ மற்றொழிந்து
துஞ்சுகினு மங்கோர் சுகமுளதே - வஞ்சியரைப் ௱௬௭

---

* கட்டுதல் - எ-து, ஈண்டுதழுவுதலென்னும்பொருட்டு.

பார்த்தாடி யோடிப் படர்கின்றாய் வெந்நரகைப்
பார்த்தாலு மங்கோர் பலனுண்டே - சேர்த்தார்கைத் ௩௬௯

தொட்டாற் களித்துச் சுகிக்கின்றாய் வன்பூதந்
தொட்டாலு மங்கோர் துணையுண்டே - நட்டாலுந் ௩௬௧

தெவ்வின் மடவாரைத் தினைக்கின்றாய் தீவிடத்தை
வவ்வுகினு மங்கோர் மதியுண்டே - செவ்விதழ்நீர் ௩௭0

உண்டான் மகிழ்வாய்நீ யொண்சிறுவர் தஞ்சிறுநீ
ருண்டாலு மங்கோ ரூநனுண்டே - கண்டாகக் ௩௭௧

கவ்வுகின்ற யவ்விதழைக் கார்மதுகம் வேம்பிவற்றைக்
கவ்வுகினு மங்கோர் சுதியுண்டே - யவ்விளையர் ௩௭௨

மென்றியு மிச்சில் விழைகின்றாய் நீவெறும்வாய்
மென்றாலு மங்கோர் வினைவுண்டே - முன்றானைப் ௩௭௩

பட்டான் மகிழ்வு பதிந்தாய் பதைக்கவம்பு
பட்டாலு மங்கோர் பலனுண்டே - கிட்டாமெய்த் ௩௭௪

தீண்டிடிலுள் ளோங்கிச் சிரிக்கின்றாய் செந்தேண்முன்
தீண்டிடினு மங்கோர் திறனுண்டே - வேண்டியவர் ௩௭௫

வாய்க்கிடயா தானுமொன்று வாங்குகின்றாய் மற்றதையோர்
நாய்க்கிடினு மங்கோர் நலனுண்டே - தாக்கவர்க்காய்த் ௩௭௬

தேட்டாண்மை செய்வாயத் தேட்டாண்மை யைத்தெருவிற்
போட்டாலு மங்கோர் புகழுண்டே - வாட்டாரைக் ௩௭௭

கொண்டா ருடனுணவு கொள்கின்றாய் குக்கனுட
னுண்டாலு மங்கோ ருறவுண்டே - மிண்டாகும் ௩௭௮

இங்கிவர்வாய்ப் பாகிலையை யேற்கின்றாய் புன்மலத்தை
நுங்கினுமங் கோர்நன் * னெறிவுண்டே - மங்கையர்தம் ௩௭௯

வத்தா மனைகாத் திருக்கின்ற யீமமது
காத்தாலு மங்கோர் கனமுண்டே - பூத்தாழ்வோர் ௩௮0

காட்டாக் குரல்கேட்பாய் கர்த்தபத்தின் பாழ்ங்குரலைக்
கேட்டாலு மங்கோர் கிளருண்டே - கோட்டாவி ௩௮௧

* நொறில்-எ-து, அடக்கம்.

## நெஞ்சறிவுறுத்தல்.

ஆழ்ந்தாரு டன்வாழ வாதரித்தா யாழ்ங்கடலில்
வீழ்ந்தாலு மங்கோர் விரகுண்டே - வீழ்ந்தாருள் ௩௮௨

வீட்டான் முலையுமெதிர் வீட்டான் முகமுமுறக்
காட்டாரின ராகண்டுங் காய்ந்திலையே - கூட்டாட்குச் ௩௮௩

செய்கை யிடும்படிதன் சீமான் றனதுபணப்
பைகை யிடல்கண்டும் பயந்திலையே - சைகையது ௩௮௪

கையா லொருசிலர்க்குங் கண்ணா லொருசிலர்க்குஞ்
செய்யா மயக்குகின்றார் தேர்ந்திலையே - யெய்யாமல் ௩௮௫

ஈறிகந்த விவ்வகையா யிம்மடவார் செய்கையெலாங்
கூறுவனே லம்ம குடர்குழம்புங் - கூறுமிவா ௩௮௬

வாயொருபாற் பேச மனமொருபாற் செல்லவுட
லாயொருபாற செய்ய வழிவார்கா - ணயவிவர் ௩௮௭

நன்றறியார் தீதே நயப்பார் சிவதலத்திற
சென்றறியார் பேய்க்கே சிறப்பெடுப்பா - ரின்றிவரை ௩௮௮

வஞ்சமென்கோ வெவ்வினையாம் வல்லியமென் கோபவத்தின்
புஞ்சமென்கோ மாநரக பூமியெனகோ - வஞ்சுறுமீர் ௩௮௯

வாளென்கோ வாய்க்கடங்கா மாயமென்கோ மண்முடிவு
நாளென்கோ வெய்ய நமனென்கோ - கோளென்கோ ௩௯0

சாலமென்கோ வானிந்திர சாலமென்கோ வீறுல
காலமென்கோ நின்பொல்லாக் காலமென்கோ - ஞாலமதிற் ௩௯௧

பெண்ணென்றால் யோகப் பெரியோர் நடுங்குவரேன்
மண்ணின்றார் யார்நடுங்க மாட்டார்காண் - பெண்ணென்றாற் ௩௯௨

பேயு மிரங்குமென்பாய் பேயொன்றோ தாம்பயந்த
சேயு மிரங்குமவர் தீமைக்கே - யாயுஞ்செம் ௩௯௩

பொன்னுற் றுகிலாற் புனையா விடிலவர்மெய்
யென்னுகு மற்றிதைநீ யெண்ணிலையே - யின்னுமைக் ௩௯௪

கொத்தென்ற வம்மடவாா கூட்ட மெழுமைக்கும்
வித்தென் றறிந்துமதை விட்டிலையே - தொத்தென்று ௩௯௫

பாச வினைக்குட் படுத்துறுமப் பாவையர்மே
லாசையுனக் கெவ்வா றடைந்ததுவே - நேசமிலாய் ௩௯௬

நின்னாசை யென்னென்பே னெய்வீழ் நெருப்பெனவே
பொன்னாசை மேன்மேலும் பொங்கினையே - பொன்னாசை ௱௬௭

வைத்திழந்து வீணே வயிறெரிந்து மண்ணுலகி
லெத்தனைபேர் நின்கண் ணெதிர்நின்றார் - தத்துகின்ற ௱௬௮

பொன்னுடையார் துன்பப் புணரியொன்றே யல்லதுமற்
றென்னுடையார் கண்டிங் கிருந்தனையே - பொன்னிருந்தால் ௱௬௯

ஆற்றன் மிகு தாயுமறி யாவகையால் வைத்திடவோ
ரேற்றவிடம் வேண்டுமதற் கென்செய்வா - யேற்றவிடம் ௨௦௦

வாய்த்தாலு மங்கதனை வைத்தவிடங் காட்டாம
லேய்த்தாற் சிவசிவமற் றென்செய்வா - யேய்க்காது ௨௦௧

நின்றாலும் பின்னதுதா னீடுங் கரியான
தென்றா லரகரமற் றென்செய்வாய் - நன்றாக ௨௦௨

ஒன்றொருசார் நில்லென்றா லோடுகின்ற நீயதனை
யென்றும் புரப்பதனுக் கென்செய்வாய் - வென்றியொடு ௨௦௩

போர்த்துப் புரட்டிப் பெருஞ்சினத்தான் மாற்றலர்க
ளீர்த்துப் பறிக்கிலதற் கென்செய்வாய் - பேர்த்தெடுக்கக் ௨௦௪

கைபுகுத்துங் காலுட் கருங்குளவி செங்குளவி
யெய்புகுத்தக் கொட்டிடின்மற் றென்செய்வாய் - பொய்புகுத்தும் ௨௦௫

பொன்காவற் பூதமது போயெடுக்கும் போதுமறித்
தென்காவ லென்றான்மற் றென்செய்வாய் - பொன்காவல் ௨௦௬

வீறுங்கா லாணவமாம் வெங்கூளி நின்றலைமே
லேறுங்கான் மற்றதனுக் கென்செய்வாய் - மாறுஞ்சீர் ௨௦௭

உன்னேயம் வேண்டி யுலோபமெனுங் குறும்ப
னின்னே வருவனதற் கென்செய்வாய் - முன்னேதும் ௨௦௮

இல்லா நமக்குண்டோ வில்லையோ வென்னுநல
மெல்லா மழியுமதற் கென்செய்வாய் - நில்லாமல் ௨௦௯

ஆய்ந்தோர் சிலநாளி லாயிரம்பேர் பக்கலது
பாய்ந்தோடிப் போவதுநீ பார்த்திலையே - யாய்ந்தோர்சொல் ௨௧௦

கூத்தாட் டவைசேர் குழாம்விளிந்தாற் போலுமென்ற
சீர்த்தாட் குறண்மொழியுந் தேர்ந்திலையே - பேர்த்தோடும் ௨௧௧

# நெஞ்சறிவுறுத்தல். 

நாட்கொல்லி யென்று நடுங்குகின்றாய் நாளறியா
வாட்கொல்லி யென்பரிதை யாய்ந்திலையே - கீழ்க்கொல்லைப் ௪௧௨

பச்சிலையாற் பொன்னைப் படைப்பாரேன் மற்றதன்மே
லிச்சையுனக் கெவ்வா றிருந்ததுவே - யிச்சையிலார் ௪௧௩

இட்டமலம் பட்டவிட மெல்லாம்பொ னாமென்று
விட்டமதை * விட்டற் கிசைந்திலையே - முட்டகற்றப் ௪௧௪

பொன்னடப்ப தன்றியது போனகமே யாதியவா
யென்னடுத்த தொன்றுமஃ தெண்ணிலையே - யிந்நிலத்தில் ௪௧௫

நீண்மயக்கம் பொன்முன் னிலையா யுலகியலாம்
வீண்மயக்க மென்றதனை விட்டிலையே - நீள்வலயத் ௪௧௬

திச்செல்வ மின்றி யியலாதேற் சிற்றுயிர்க
ளெச்செல்வங் கொண்டிங் கிருந்தனவே - வெச்சென்ற ௪௧௭

மண்ணாசை கொண்டனைநீ மண்ணாளு மன்னரெலா
மண்ணா லழிதன் மதித்திலையே - யெண்ணாது ௪௧௮

மண்கொண்டார் மாண்டார்தம் மாய்ந்தவுடல் வைக்கவயன்
மண்கொண்டார் தம்மிருப்பில் வைத்திலரே - திண்கொண்ட ௪௧௯

விண்ணேகுங் காலங்கு வேண்டுமென வீண்டுபிடி
மண்ணேனுங் கொண்டேக வல்லாரோ - மண்ணேயம் ௪௨0

என்னதென் றான் முன்னொருவ னென்னதென் றான் பின்னொருவ
னின்னதுநீ கேட்டிங் கிருந்திலையோ - மன்னுலகிற் ௪௨௧

கண்காணி யாய்நீயே காணியல்லாய் நீயிருந்து
மண்காணி யென்று மதித்தனையே - கண்காண ௪௨௨

மண்காணி வேண்டி வருந்துகின்றாய் நீமேலை
விண்காணி வேண்டல் வியப்பன்றே - யெண்காண ௪௨௩

அந்தரத்தி னின்றாய்நீ யந்தோ நிலைவிடமண்
ணந்தரத்தி னின்ற தறிந்திலையே - தந்திரத்தின் ௪௨௪

மண்கொடுப்பே னென்றுரைக்கில் வைவார் சிறுவர்களு
மண்கொடுக்கி னீதான் மகிழ்ந்தனையே - வண்கொடுக்கும் ௪௨௫

* விடற்கு-எ-து, விட்டற்கெனவிகாரமாயிற்று.

வீடென்றேன் மற்றதைமன் வீடென்றே நீநினைந்தாய்
வீடென்ற சொற்பொருளை விண்டிலையே - நாடொன்றும் ௬௨௬

மண்ணான் மரத்தால் வனைகின்ற வீடனைத்துங்
கண்ணாரக் கட்டழிதல் கண்டிலையோ - மண்ணான ௬௨௭

மேல்வீடு மங்குடைய வேந்தர்களு மேல்வீட்டப்
பால்வீடும் பாழாதல் பார்த்திலையோ - மேல்வீட்டில் ௬௨௮

ஏறுவனே யென்பா யியமன் கடாமிசைவந்
தேறுவனே லுன்னுசை யென்னுமோ - கூறிடுமிம் ௬௨௯

மண்ணளித்த வேதியனு மண்விருப்பங் கொள்ளானே
லெண்ணமுனக் கெவ்வா றிருந்ததுவே - மண்ணிடத்தில் ௬௩௦

ஆகாத் துரும்பிடத்து மாசைவைத்தா யென்னினுன்ற
னேகாப் பெருங்காம மென்சொல்கேன் - போகாத ௬௩௧

பாபக் கடற்கோர் படுகடலாம் பாழ்வெகுளிக்
கோபக் கடலிற் குளித்தனையே - தாபமுறச் ௬௩௨

செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீயதென்ற தெண்ணிலையே - மல்லல்பெறத் ௬௩௩

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க வென்றதனைப்
பொன்னைப்போற் போற்றிப் புகழ்ந்திலையே - துன்னி ௬௩௪

அகழ்வாரைத் தாங்குநிலம்போல வென்னுந்
திகழ்வாய் மையுநீ தெளியா - யிகழ்வாரை ௬௩௫

எவ்வண்ண நம்மை யிகழ்வா ரறிவோமென்
றிவ்வண்ண மென்னைவெளி யிட்டனையே - தெவ்வென்ன ௬௩௬

ஓரா வெகுளி யுடையான் றவமடையான்
றீராயென் பாரதுவுந் தேர்ந்திலையே - பேராகின் ௬௩௭

வெவ்வினைக்கீ டாகவரன் வெம்மைபுரி வானென்று
லிவ்வெகுளி யார்மாட் டிருத்துவதே - செவ்வையிலாய் ௬௩௮

ஏய்ந்தனையன் போரிடத்தி லின்னாமை செய்தவரைக்
காய்ந்தனைமற் றென்னபலன் கண்டனையே - வாய்ந்தறிவோர் ௬௩௯

எல்லா நலமு மிஃதேயென் றோத்துகின்ற
கொல்லா நலஞ்சிறிதுங் கொண்டிலையே - பொல்லாத ௬௪௦

# நெஞ்சறிவுறுத்தல்.



வன்போ டிருக்கு மதியிலிநீ மன்னுயிர்க்க
ணன்போ டிரக்க மடைந்திலையே - யின்போங்கு ௪௪௧

தூய்மையென்ப தெல்லாந் துணையா யணைவதுதான்
வாய்மையென்ப தொன்றே மதித்திலையே - தூய்மையிலாய் ௪௪௨

மானொருகை யேந்திநின்ற வள்ளலன்பர் தங்களுளே
நானொருவ னென்று நடித்தனையே - யானமற்றைப் ௪௪௩

பாதகங்க ளெல்லாம் பழகிப் பழகியதிற்
சாதகஞ்செய் வோரிற் றலைநின்றாய் - பாதகத்தில் ௪௪௪

ஓயா விகார வுணர்ச்சியினா லிவ்வுலக
மாயா விகார மகிழ்ந்தனையே - சாயாது ௪௪௫

நீயிளமை மெய்யாய் நினைந்தாய் நினைப்பெற்ற
தாயிளமை யெத்தனைநாட் டங்கியதே - யாயிளமை ௪௪௬

மெய்கொடுத்த தென்பாய் விருத்தர்கட்கு நின்போல்வார்
கைகொடுத்துப் போவதனைக் கண்டிலையே - மெய்கொடுத்த ௪௪௭

கூனொடுங்கைக் கோலூன்றிக் குந்தி நடைதளர்ந்து
கானடுங்க நிற்பவரைக் கண்டிலையோ - வூனொடுங்க ௪௪௮

ஐயநட வென்றே யரும்புதல்வர் முன்செலப்பின்
பைய நடப்பவரைப் பார்த்திலையோ - வெய்யநமன் ௪௪௯

நாடழைக்கச் சேனை நரி நாயழைக்க நாறுசுடு
காடழைக்க மூத்துநின்றார் கண்டிலையோ - பீடடைந்த ௪௫௰

மெய்யுலர்ந்து நீரின் விழியுலர்ந்து வாயுலர்ந்து
கையுலர்ந்து நிற்பவரைக் கண்டிலையோ - மெய்யுலர்ந்துஞ் ௪௫௧

சாகான் கிழவன் றளர்கின்றா னென்றிவணீ
யோகாளஞ் செய்வதனை யோர்ந்திலையோ - வாகாத ௪௫௨

கண்டமிது பொல்லாக் கடுநோ யெனுங்குமர
கண்டமிஃ தென்பவரைக் கண்டிலையோ - கொண்டவுடல் ௪௫௩

குட்டமுறக் கைகால் குறுக்குமிது பொல்லாத
குட்டமென நோவார் குறித்திலையோ - துட்டவினை ௪௫௪

மாலையினுங் காலையினு மத்தியினுங் குத்துமிது
சூலையென நோவாரைச் சூழ்ந்திலையோ - சாலவுமித் ௪௫௫

தேக மதாலியச் செய்யுங்கா ணுய்வரிதா
மேகமிஃ தென்பாரை மேவிலேயோ - தாகமுறச் ௪௫௬

சித்தநோய் செய்கின்ற சீதநோய் வாதமொடு
பித்தநோய் கொண்டவர்பாற் போந்திலேயோ - மெத்தரிய ௪௫௭

கைப்பிணியுங் காற்பிணியுங் கட்பிணியோ டெண்ணரிய
மெய்ப்பிணியுங் கொண்டவரை விண்டிலேயோ - வெய்ப்புடைய ௪௫௮

மூட்டேறுங் கைகான் முடங்கூன் முதலாய
வெட்டேறுங் கொண்டவரை யெண்ணிலேயோ - தட்டேறிங் ௪௫௯

கெண்ணற்ற துண்டே லிளமை யொருபொருளா
யெண்ணப் படுமோவென் றெண்ணிலேயே - யெண்ணத்திற் ௪௬௰

பொய்யென் றறவோர் புலம்புறவு மிவ்வுடம்பை
மெய்யென்று பொய்ம்மயக்க மேவினையே - கைநின்று ௪௬௧

கூகா வெனமடவார் கூடி யழல்கண்டு
நீகாதல் வைத்து நிகழ்ந்தனையே - மாகாதல் ௪௬௨

பெண்டிருந்து மாழ்கப் பிணங்கொண்டு செல்வாரைக்
கண்டிருந்து மந்தோ கலங்கிலேயே - பண்டிருந்த ௪௬௩

ஊரார் பிணத்தி னுடன்சென்று நாமீண்டு
நீராடல் சற்று நினைந்திலேயே - சீராக ௪௬௪

இன்றிருந்தார் நாளைக் கிருப்பதுபொய் யென்றறவோர்
நன்றிருந்த வார்த்தையுநீ நாடிலேயே - யொன்றி ௪௬௫

உறங்குவது போலுமென்ற வொண்குறளின் வாய்மை
மறங்கருதி யந்தோ மறந்தாய் - கறங்கின் ௪௬௬

நெருந லுளனொருவ னென்னு நெடுஞ்சொன்
மருவுங் குறட்பா மறந்தாய் - தெருவில் ௪௬௭

இறந்தார் பிறந்தா ரிறந்தா ரெனுஞ்சொன்
மறந்தாய் மறந்தாய் மறந்தா - யிறந்தார் ௪௬௮

பறையோசை யண்டம் படவொன் றொலிக்க
மறையோசை யன்றே மறந்தா - யிறையோன் ௪௬௯

புலனைந்து மென்றருளும் பொன்மொழியை மாயா
மலமொன்றி யந்தோ மறந்தாய் - நிலமொன்றி ௪௭௰

## நெஞ்சறிவுறுத்தல்.

விக்கு ளொழுநீர் விடுமினென வயலோர்
நெக்குருக லந்தோ நினைந்திலையே - மிக்கனலில் ௬௭௧

நெய்விடல்போ லுற்றவர்கண் ணீர்விட் டழவுயிர்பன்
மெய்விடலுங் கண்டனைநீ விண்டிலையே - செய்வினையின் ௬௭௨

வாள்கழியச் செங்கதிரோன் வான்கழிய நம்முடைய
நாள்கழிதற் கந்தோ நடுங்கிலையே - கோள்கழியும் ௬௭௩

நாழிகையோர் நாளாக நாடினையே நாளையொரு
நாழிகையா யெண்ணி நலிந்திலையே - நாழிகைமுன் ௬௭௪

நின்றா ரிருந்தார் நிலைகுலைய வீழ்ந்துயிர்தான்
சென்றா ரெனக்கேட்டுந் தேர்ந்திலையே - பின்றாது ௬௭௫

தொட்டா ருணவுடனே தும்மினா ரம்மவுயிர்
விட்டா ரெனக்கேட்டும் வெட்கிலையே - தட்டாமல் ௬௭௬

உண்டார் படுத்தா ருறங்கினார் பேருறக்கங்
கொண்டா ரெனக்கேட்டுங் கூசிலையே - வண்டாரார் ௬௭௭

நேற்று மணம்புரிந்தார் நீறானா ரின்றென்று
சாற்றுவது கேட்டுந் தணந்திலையே - வீற்றுறுதேர் ௬௭௮

ஊர்ந்தார் தெருவி லுலாப்போந்தார் வானுலகஞ்
சேர்ந்தா ரெனக்கேட்டுந் தேர்ந்திலையே - சேர்ந்தாங்கு ௬௭௯

என்னே யிருந்தா ரிருமினா ரீண்டிறந்தா
ரன்னே யெனக்கேட்டு மாய்ந்திலையே - கொன்னே ௬௮0

மருவுங் கருப்பைக்குள் வாய்ந்தே முதிராக்
கருவும் பிதிர்ந்துதிரக் கண்டாய் - கருவொன் ௬௮௧

றொடுங்க *ஐயைந்தி லொவ்வொன்றி லந்தோ
கெடுகின்ற தென்றதுவுங் கேட்டாய் - படுமிந் ௬௮௨

நிலைமுற்ற யோனி நெருக்கி லுயிர்போய்ப்
பன்னற்று வீழ்ந்ததுவும் பார்த்தாய் - பலனுற்றே ௬௮௩

காவென்று வீழ்ந்தக் கணமே பிணமாகக்
கோவென் றழுவார் குறித்திலையோ - நோவின்றிப் ௬௮௪

---

* ஐயைந்து என்பதனை ஐந்து மைந்து மென வும்மைத்தொகை யாகக் கொள்க.

பாலனென்றே யன்னைமுலைப் பாலருந்துங் காலையிலே
காலனுயிர்குடிக்கக் கண்டிலையோ - மேலுவந்து ௪௮௫

பெற்றார் மகிழ்வெய்தப் பேசி விளையாடுங்கா
லற்றுவி போவ தறிந்திலையோ - கற்றுயப் ௪௮௬

பள்ளியிடுங் காலவனைப் பாரநமன்வாயி
லள்ளியிடுந் தீமை யறிந்திலையோ - பள்ளிவிடுந் ௪௮௭

காளைப் பருவமதிற் கண்டா ரிரங்கிடவவ்
வாளைச் சமன்கொள்வ தாய்ந்திலையோ - வேளைமண ௪௮௮

மாப்பிள்ளை யாகி மணமுடிக்கு மன்றவனே
சாப்பிள்ளை யாதலெண்ணிச் சார்ந்திலையே - மேற்பிள்ளை ௪௮௯

மாடையோர்ப் பெண்டுடனில் வாழுங்காற் பற்பலர்தாம்
பாடைமேற் சேர்தலினைப் பார்த்திலையோ - வீடலிஃ ௪௯௦

இக்கணமோ மேல்வந் திடுங்கணமோ வன்றிமற்றை
யெக்கணமோ வென்றார்நீ யெண்ணிலையே - தொக்குறுதோற் ௪௯௧

கூடென்கோ விவ்வுடம்பைக் கோள்வினைநீ ரோட்டில்விட்ட
வேடென்கோ நீர்மே லெழுத்தென்கோ - காடென்கோ ௪௯௨

பாழென்கோ வொன்பதுவாய்ப் பாவையென்கோ வன்பிறவி
யேழென்கோ கன்மமதற் கீடென்கோ - தாழ்மண்ணிற் ௪௯௩

பாண்டமென்கோ வெஞ்சரக்குப் பையென்கோ பாழ்ங்கரும
காண்டமென்கோ வாணவத்தின் கட்டென்கோ - கொண்டையார் ௪௯௪

மெய்யென்கோ மாய விளைவென்கோ மின்னென்கோ
பொய்யென்கோ மாயப் பொடியென்கோ - மெய்யென்ற ௪௯௫

மங்கலத்தை மங்கலத்தால் வாஞ்சித் தனருலக
ரங்கவற்றை யெண்ணா தலைந்தனையே - தங்குலகின் ௪௯௬

மற்றிதனை யோம்பி வளர்க்க வுழன்றனைநீ
கற்றதனை யெங்கே கவிழ்த்தனையே - யற்றவரை ௪௯௭

இக்கட் டவிழ்த்திங் கெரிமூட் டெனக்கேட்டும்
முக்கட்டுந் தேட முயன்றனையே - யிக்கட்டு ௪௯௮

மண்பட்டு வெந்தீ மரம்பட் டிடக்கண்டும்
வெண்பட் டுடுக்க விரைந்தனையே - பண்பட்ட ௪௯௯

## நெஞ்சறிவுறுத்தல்.

ஐயா வனைநா ணவிழுமெனக் கேட்டுநின்று
மெய்யா பரணத்தின் மேவினையே - யெய்யாமல் ௫௦௦

காதிற் கடுக்கன் கழற்றுமெனக் கேட்டுநின்று
மேதிற் பணியினிடத் தெய்தினையே - தாதிற்குத் ௫௦௧

துற்கந்த மாகச் சுடுங்கான் முகர்ந்திருந்தும்
நற்கந்தத் தின்பா னடந்தனையே - புற்கென்ற ௫௦௨

வன்சுவைத்தீ நாற்ற மலமாய் வரல்கண்டு
மின்சுவைப்பா லெய்தி யிருந்தனையே - முன்சுவைத்துப் ௫௦௩

பாறுண்ட காட்டிற் பலர்வெந் திடக்கண்டுஞ்
சோறுண் டிருக்கத் துணிந்தனையே - மாறுண்டு ௫௦௪

கூம்புலகம் பொய்யெனநான் கூவுகின்றேன் கேட்டுமிகு
சோம்பலுடன் றூக்கந் தொடர்ந்தனையே - யாம்பலனோர் ௫௦௫

நல்வாழ்வை யெண்ணி நயந்தோர் நயவாத
வில்வாழ்வை மெய்யென் றிருந்தனையே - சொல்லாவி ௫௦௬

ஈன்றோன் றனைநாளு மெண்ணாம லிவ்வுடம்பை
யீன்றோனை யீன்றோனென் றெண்ணினையே - யீன்றோர்கள் ௫௦௭

நொந்தா லுடனின்று நோவார் வினைப்பகைதான்
வந்தா லதுநீக்க வல்லாரோ - வந்தாடல் ௫௦௮

உற்றசிறார் நம்மடையா தோட்டுகிற்பார் தென்றிசைவாழ்
மற்றவன்வந் தாற்றடுக்க வல்லாரோ - சிற்றுணவை ௫௦௯

ஈங்கென்றால் வாங்கி யிடுவா ரருளமுதம்
வாங்கென்றால் வாங்கியிட வல்லாரோ - தீங்ககற்றத் ௫௧௦

தூண்டா மனையாதிச் சுற்றமெலாஞ் சுற்றியிட
நீண்டா யவர்நன் னெறித்துணையோ - மாண்டாற்பின் ௫௧௧

கூடி யழத்துணையாய்க் கூடுவார் வன்னரகில்
வாடியழும் போது வருவாரோ - நீடியநீ ௫௧௨

இச்சிவர் தன்றுணையோ வீங்கிவர்க ளின்றுணையோ
சிச்சீ யிதென்ன திறங்கண்டா - யிச்சீவர் ௫௧௩

நின்னைவைத்து முன்சென்றா னீசெய்வ தென்னவர்முன்
னிந்நிலத்தி னீசென்றா லென்செய்வர் - நின்னியல்பின் ௫௧௪

எத்தனைதா யெத்தனைபே ரெத்தனையூ ரெத்தனைவாழ்
வெத்தனையோ தேக மெடுத்தனையே - யத்தனைக்கும் ருகரு

அவ்வவ் விடங்கடொறு மவ்வவரை யாண்டாண்டிங்
கெவ்வெவ் விதத்தா லிழந்தனையோ - யவ்விதத்தில் ருகசு

ஒன்றேனு நன்று யுணர்ந்திருத்தி யேலிவரை
யின்றே துறத்தற் கிசையாயோ - நின்றேரில் ருகஎ

தாயார் மனையார் தனயரார் தம்மவரார்
நீயா ரிதனை நினைந்திலையே - சேயேகில் ருகஅ

ஏங்குவரோ வென்று யியமன்வரி னின்னுயிரை
வாங்கிமுடி யிட்டகத்தில் வைப்பாரோ - நீங்கியிவண் ருகக

உன்றந்தை தன்றனக்கிங் கோர்தந்தை நாடுவனீ
யென்றந்தை யென்றுரைப்ப தெவ்வாறே - சென்றுபின்னின் ருஉ0

தன்மனையாண் மற்றொருவன் றன்மனையா ளாவளெனி
லென்மனையா ளென்பதுநீ யெவ்வணமே - நன்மைபெறு ருஉக

நட்பமைந்த நன்னெறிநீ நாடா வகைதடுக்கு
முட்பகைவ ரொன்றிவரை யோர்ந்திலையே - நட்புடையாய் ருஉஉ

எம்மான் படைத்தவுயி ரிந்தனைக்குட் சில்லுயிர்பா
லிம்மா லடைந்ததுநீ யென்னினைந்தோ - வம்மாநில் ருஉங

எம்பந்த மெனினக்கிங் கில்லையென்றுன் மற்றையவர்
தம்பந்த மெவ்வாறு தாங்கியதே - சம்பந்தர் ருஉச

அற்றவருக் கற்றசிவ னுமெனுமப் பொன்மொழியை
மற்றைமொழி போன்று மறந்தனையே - சிற்றுயிர்க்குக் ருஉரு

கற்பனையிற் காய்ப்புளதாய்க் காட்டும் பிரபஞ்சக்
கற்பனையை மெய்யென்று கண்டனையே - பற்பலவாந் ருஉசு

* தூரியத்திற் றோன்றொலிபோற் றோன்றிக் கெடுமாயா
காரியத்தை மெய்யெனநீ கண்டனையே - சீரியற்றும் ருஉஎ

ஆடகத்திற் பித்தளையை யாலித் திடுங்கபட
நாடகத்தை மெய்யென்று நம்பினையே - நீடகத்திற் ருஉஅ

* தூரியம்-எ-து, பறை.

காயவித்தை யாலக் கடவு ளியற்றுமிந்த
மாயவித்தை மெய்யெனநீ வாழ்ந்தனையே - வாயவித்தை ருஉகூ

இப்படக மாயை யிருட்டமமே யென்னுமொரு
முப்படகத் துள்ளே முயங்கினையே - யொப்பிறைவன் ருஙo

ஆனவொளி யிற்பரையா மாதபத்தி னூற்றோன்றுங்
கானலினை நீராய்க் களித்தனையே - யானகிரி ருஙக

யாசத்தி யென்றிடுமோ ரம்மைவிளை யாட்டெனுமிப்
பாசத்தி னுள்ளே படர்ந்தனையே - நேசத்திற் ருஙஉ

பொய்யொன்றுண் மெய்யிற புகும்பால லீலை, னை
மெய்யென்று வீணில் விரிந்தனையே - பொய்யென் று ருஙங

மீட்டுநின்ற லீலா விநோத மெனுங் கதையைக்
கேட்டுநின்று மந்தோ கிளர்ந்தனையே - யீட்டிநின்ற ருஙச

காலத்தை வீணிற் கழிக்கும் படிமேக
சாலத்தை மெய்யாயத் தருக்கினையே - சாலத்திற் ருஙரு

கண்மையகன் றோங்குமந்த காரத்திற் செம்மாப்புற்
றுண்மையொன்றுங் காணா துழன்றனையே - வண்மையிலாய் ருஙசூ

இங்குநினைப் பெரியோ ரொன்னினைப்பா ரேமாப்பிற்
கங்குலினைப் பகலாய்க் கண்டனையே - தங்குறுமித் ருஙஎ

தேகாதி பொய்யெனவே தேர்ந்தா ருரைக்கவுநீ
மோகாதிக் குள்ளே முயல்கின்றா - யோகோருங் ருஙஅ

கோமுடிக்கட் டைப்பற்றிக் கொண்டதென்றான் மற்றதற்குப்
பூமுடிக்கத் தேடுகின்றோர் போன்றனையே - மாமுடிக்கும ருஙகூ

வாழ்வுநிலை யன்றிமைப்பின் மாறுகின்ற தென்றுரைத்தும்
* வீழ்வுகொடு வாளா விழுகின்றாய் - தாழ்வுறநும் ருசo

விண்டுறுங்கை வீடனலால் வேகின்ற தென்னவுட்போ
யுண்டுறங்கு கின்றோரை யொத்தனையே - தொண்டுலகங் ருசக

கானமுயற் கொம்பாய்க் கழிகின்ற தெனநின்றே
னீநயமுற் றந்தோ நிகழ்கின்றா - யானதும்மூர் ருசஉ

---

* வீழ்வு-எ-து, விருப்பம்.

வெள்ளத்தி னுள்மூழ்கி விட்டதென்றுற் சென்றுகடை
கொள்ளத் திரிபவர்போற் கூடினையே - கொள்ளவிங்கு ருசஙு

அண்டனவெல் லாநிலையாக் கைதவமென் கின்றேனீ
கொண்டவைமுற் சேரக் குறிக்கின்று - யுண்டழிக்க ருசச

வூழிவெள்ளம் வந்ததென்று வுண்பதற்கு மாடுதற்கு
* மூழிநன்னீ ரோவெனபா ரொத்தனையே - யேழியறாஉங் ருசரு

தற்புவனம் போகந் தனுகரண மென்கின்ற
சொற்பனத்தி லந்தோ துவன்றினையே - பற்பகலும் ருசகூ

உண்டனவே யுண்கின்று யோர்ந்தனவே யோர்கின்றுய்
கண்டனவே கண்டு களிக்கின்றுய் - கொண்டனவே ருசஎ

கொண்டியங்கு கின்றுய் குறித்தனவே பிற்குறித்துப்
பண்டறியார் போலப் படர்கின்றுய் - பண்டறிந்து ருசஅ

சொல்லாடி நின்றனவே சொல்கின்றுய் மற்றிதனை
நல்லோர்கள் கண்டா னகையாரோ - செல்லான ருசகூ

காலம்போ லிங்குநிகழ் காலமுங்காண் கின்றியெதிர்
காலமற்று மத்திறமேற் காண்குவையேற் - சாலவுமுன் ருரு0

போதுசெலா முன்னமனு பூதியைநீ நாடாமல்
யாதுபய னெண்ணி யினைகின்றுய் - தீதுசெயும் ருருக

வீணவத்தை யெல்லாம் விளைக்குந் திறன்மூல
வாணவத்தி னூலே யழிந்தனையே - யாணவத்தில் ருருஉ

நீயா ரெனவறியாய் நின்னெதிரி னின்றவரை
நீயா ரெனவினவி நீண்டனையே - யோயாமல் ருருங

வூனின்ற வொன்றி னுளவறியா யந்தோநீ
நானென்று சொல்லி நலிந்தனையே - நானென்று ருருச

சொல்லுதியோ சொல்லாயோ துவ்வாமை பெற்றுருநீ
யல்லலுறுங் காலத் தறைகண்டா - யல்லவெலாம் ருருரு

நீயிங்கே நானங்கே நிற்கநடு வேகுதித்தா
னீயெங்கே நானெங்கே நின்றறிகா - னீயிங்கு ருருசு

---

* ஊழி-எ-து, கடல்.

தேன்மொழிப்பெண்ணரசியருட்செல்வமெனக்களித்தாள்சிவகாமவல்லியொ
டுசெம்பொன்மணிப்பொதுவில்,வான்மொழியநின்றிலங்குநின்வடிவைச்சிறியேன்
மனங்கொண்டகாலத்தேவாய்த்தவனுபவத்தை, நான்மொழியமுடியாதேலன்பர்க
ண்டகாலநண்ணியமெய்வண்ணமதையெண்ணியெவர்புகல்வார்,நூன்மொழிக்கும்
பொருட்குமிகநுண்ணியதாய்ஞானநோக்குடையார்நோக்கினிலேநோக்கிய மெய்ப்
பொருளே. ௬

சிற்றிடையெம்பெருமாட்டிதேவர்தொழும்பதத்தாள்சிவகாமவல்லியொடுசி
றந்தமணிப்பொதுவில், லுற்றிடைநின்றிலங்குகின்றநின்வடிவைக்கொடியேனுன்னு
தொறுமுளமிளகித்தளதளவென்றுருகி, மற்றிடையில்வலியாமலாடுகின்றதென்று
ல்வழியடியர்விழிகளினான்மகிழ்ந்துகண்டகாலம்,பற்றிடையாதாங்கவர்கட்கிருந்த
வண்ணந்தனையார்பகர்வாரோபகர்வாரேறபகவனிகர்வாரோ. ௭

ஆரமுதமனையவளென்னம்மையபிராமியானந்தவல்லியொடும்மம்பலத்தேவிள
ங்கும், பேரமுதமயமாமுன்றிருவடிவைக்குறித்துப்பேசுகின்றபோதுமணம்வீசுகி
ன்றதொன்றே, சீரமுதமாகியெல்லாந்தித்திப்பதன்போர்சிறிதுமிலாக்கடைப்புலை
யேன்றிறத்துக்கிங்கென்று,லூரமுதப்பேரன்பாபேசுமிடத்தவர்பாலுறறவண்ணமி
ற்றிதென்னவுன்னமுடியாதே. ௮

பொற்பதத்தாளென்னளவிற்பொன்னாசைதவிர்த்தாள்பூரணியானந்தசிவபோ
கவல்லியோடு, சொற்பதமுங்கடந்தமன்றில்விளங்கியநின்வடிவைத்தூய்மையிலே
னெண்ணுந்தோறுமனமிளகிச், சிற்பதரதிறபராஞானமயமாகுமெனவுற்றெளிவு
டையார்காண்கின்றதிறத்திலவர்க்கிருக்கு, நற்பதமெதன்மையதோவுரைப்பரிது
மிகவுநாதமுடிதனிறபுரியுஞானநடத்தரசே. ௯

என்பிழையாவையும்பொறுத்தாளென்னைமுன்னேயளித்தாளிறைவிசிவகாம
வல்லியெனனம்மையுடனே, யின்பவடிவாய்ப்பொதுவிலிலங்கியநின்வண்ணமிற்
றெனநானினைத்திடுங்காலெற்றெனவுமொழிவே, னனபுருவாயதுவதுவாயனிநடப
ழமாகியப்பழச்சாறாகியதனருஞ்சுவையுமாகி, யெனபுருகமனஞானமயமாகுமென்
றாலெற்றேமெய்யன்புடையாரியைந்துகண்டவிடத்தே. ௧௦

கரும்பனையாளென்னிரண்டுகண்களிலேயிருந்தாள்கற்பகப்பொன்வல்லிசிவ
காமவல்லியுடனே, விரும்புமணிப்பொதுவினிலேவிளங்கியநின்வடிவைவினையுடை
யேனினைக்கின்றவேளையிலெனபுகல்வே,னிரும்பனையமனநெகிழ்ந்துநெகிழ்ந்துருகி
யொருபேரின்பமயமாகுமெனிலன்பர்கண்டகால, மரும்பிமலாநந்திட்டசிவானந்தவ
நுபவத்தையாரறிவார்நீயறிவாயம்பலத்தெம்மரசே. ௧௧

காமசத்தியுடன்களிக்குங்காலையிலேயடியேன்கனஞானசத்தியையுங்கலந்து
கொளப்புரிந்தாள், வாமசத்திசிவகாமவல்லியொடும்பொதுவில்வயங்கியநின்றிரு
வடிவைமனங்கொளும்போதெல்லா, மாமசத்தனெனுமெனக்கேயானந்தவெள்ளம
துததும்பிப்பொங்கிவழிந்தாடுமெனிலந்தோ,வேமசத்தரெனுமறிஞர்கண்டவிடத்தி
ருந்தவின்பவநுபவப்பெருமையாவர்புகல்வாரே. ௧௨

திருச்சிற்றம்பலம்.

சௌந்தரமாலை முற்றிற்று.

ஆவாவீதிசயமீதிசயமென்புகல்வேனடியரொலாநினைந்துநினைந்தவிழ்ந்தக மெக்குருகி, யோவாமலரற்றிடவுமவர்க்கருளான்மாயையுலகவிடயாநந்தமுவாது வந்துழயன்று,தீவாயநரகினிடைவிழக்கடவேனெனைத்தான்சிவாயநமவெனப்புக லுந்தெளிவுடையனுக்கிச், சாவாதவரங்கொடுத்துத்தனக்கடிமையணித்தான்றனித் தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. ௭

அண்ணாவீதிசயமீதிசயமென்புகல்வேனறங்கரைந்தநாவினர்களகங்கரைந் துகரைந்து; கண்ணாரநீர்பெருக்கிவருந்தவுமங்கருளான்கடைநாயிறகடையேன்மெ ய்க்கதியையொருசிறிது, மெண்ணாதகொடும்பாவிப்புலைமனத்துச்சிறியேனெனைக்க ருதிவலியவுநானிருக்குமிடத்தடைந்து, தண்ணார்வெண்மதியமுதமுணவொன்று கொடுத்தான்றனித்தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. ௮

ஐயாவீதிசயமீதிசயமென்புகல்வேனருமையறிந்தருள்விரும்பியுரிமைபலவி யற்றிப், பொய்யாதநிலைநின்றபுண்ணியர்களிருக்கப்புலைமனத்துச்சிறியேனோர்புல் லுநிகரில்லேன்,செய்யாதசிறுதொழிலேசெய்துழலுங்கடையேன்செருக்குடையே னெனைத்தனதுதிருவுளத்திலடைத்தே, சையாதியந்தநடுக்காட்டியொன்றுகொடுத் தான்றனித்தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. ௯

அன்னோவீதிசயமீதிசயமென்புகல்வேனருளருமையறிந்தவர்களருளமுத ம்விரும்பி, யென்னோவிங்கருளாமையென்றுகவன்றிருப்பயாதுமொருநன்றியிலே ன்றீதுநெறிநடப்பேன, முன்னோபின்னும்மறியாமூடமனப்புலையேன்முழுக்கொடி யேனெனைக்கருதிமுன்னரொழுந்தருளி, தனையோடுமிணைந்தவண்ணமொன்றெனக்கு க்கொடுத்தான்றனித்தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. ௧௦

ஐயோவீதிசயமீதிசயமென்புகல்வேனருவினைகளனுகாமலறநெறியேநடந் து, மெய்யோதுமறிஞரொலாம்விரும்பியிருந்திடவும்வெய்யவினைக்கடல்குளித்துவி ழற்கிறைத்துக்களித்துப், பொய்யோதிப்புலைபெருக்கிநிலைசுருசுகியுழலும்புலைமன த்தேனெனைககருதிப்புகுந்தருள்க்கருணைச். சையோகமுறவெனக்குமெவலிந்தொன் றுகொடுத்தான்றனித்தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. ௧௧

எற்றேயீதிசயமீதிசயமென்னிசைப்பேனிச்சையெலாம்விடுத்துவநத்திட த்துமலையிடத்து, முற்றேமெய்த்தவம்புரிவாருன்னிவிழித்திருப்பவுலகவிடயங்களை யேவிலகவிடமாட்டேன், கற்றேதுமறியகிலேன்கடையரினுங்கடையேன்கருணையி லாக்கன்மனத்துக்கள்வனெனைக்கருதிச், சற்றேயுமன்றுமிகப்பெரிதெனக்கிங்களி த்தான்றனித்தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே, ௧௨

என்னேயீதிசயமீதிசயமென்னிசைப்பேனிரவுபகலறியாமலிருந்தவிடத்தி ருந்து, முன்னேமெய்த்தவம்புரிந்தாரின்னேயுமிருப்பமூடாகளிற்றலைநின்றவேடம னக்கொடியேன்,பொன்னேயமிகப்புரிந்தபுலைக்கடையேனிழிந்தபுழுவினுமிங்கிழிந் திழிந்துபுகுந்தவெனைக்கருதித்,தன்னேயமுறவெனக்குமொன்றளித்துக்களித்தான் றனித்தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. ௧௩

ஓகோவீதிசயமீதிசயமென்னுரைப்பேனுள்ளபடியுள்ளவொன்றையுள்ளமுற விரும்பிப்,பாகோமுப்பழரசமோவெனருசிக்கப்பாடிப்பத்திசெய்வாரிருக்கவுமோ ர்பத்தியுமில்லாதே,கோகோவென்றுலகுரைப்பத்திரிகினறகொடியேன்குற்றமன்றி க்குணமறியாப்பெத்தனெனைக்கருதித், தாகோதரங்குளிர்ந்ததன்மையொன்றுகொ டுத்தான்றனித்தசிவகாமவல்லிக்கினித்தநடத்தவனே. ௧௪

திருச்சிற்றம்பலம்.

அதிசயமாலை முற்றிற்று.

உ

சிவமயம்.

சிவகணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பா.

# அபராதமன்னிப்புமாலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

செய்வகைநன்கறியாதேதிருவருளோடூடிச்சிலபுகன்றேனறிவறியாச்சிறியரி
னுஞ்சிறியேன,பொய்வகையேன்புகன்றபிழைபொறுத்தருளல்வேண்டும்புண்ணிய
னேமதியணிந்தபுரிசடையாய்விடையாய், மெய்வகையோர்விழித்திருப்பவிரும்பி
யெனையன்றேமிகவலிந்தாட்கொண்டருளிவினைதவிர்த்தவிமலா,வைவகையகடவுள
ருமந்தணரும்பரவவாநந்தத்திருநடஞ்செய்யம்பலத்தெம்மரசே. க

நிலைநாடியறியாதேநின்னருளோடூடிநீர்மையலபுகன்றேனன்னெறியொழுகா
க்கடையேன்,புலைநாயேன்புகன்றபிழைபொறுத்தருளல்வேண்டும்பூதகணஞ்சூழந
டம்புரிகின்றபுனிதா, கலைநாடுமதியணிந்தகநபவளச்சடையாய்கருத்தறியாக்காலை
யிலேகருணையளித்தவனே, தலைஞானமுனிவர்கடந்தலைமீதுவிளங்குந்தாளுடையா
யாளுடையசற்குருவென்னரசே. உ

கலைக்கடைநன்கறியாதேகநவருளோடூடிக்கரிசுபுகன்றேன்கவலைக்கடற்புணை
யென்றுணரேன்,புலைக்கடையேன்புகன்றபிழைபொறுத்தருளல்வேண்டும்போற்றி
சிவபோற்றிசிவபோற்றிசிவபோற்றி, தலைக்கடைவாயன்றிரவிற்றுண்மலரொன்றம
ர்த்தித்தனிப்பொருளென்கையிலளித்ததயவுடையபெருமான்,கொலைக்கடையார்க்
கெய்தரியகுணமலையேபொதுவிற்கூத்தாடிக்கொண்டுலகைக்காத்தாளுங்குருவே.

நின்புகழ்நன்கறியாதேநின்னருளோடூடிநெறியலவேபுகன்றேனன்னிலைவிரு
ம்பிநில்லேன், புன்புலையேன்புகன்றபிழைபொறுத்தருளல்வேண்டும்பூரணசிற்சிவ
னேமெய்ப்பொருளருளும்புநிதா, வென்புடையர்நாளிரவிலெழுந்தருளியளித்த
வென்குருவேயென்னிருகண்ணிலங்கியநன்மணியே, யன்புடையாரின்படையுமழ
கியவம்பலத்தேயாத்தாருமப்பனுமாய்க்கூத்தாடும்பதியே. ச

துலைக்கொடிநன்கறியாதேதுணையருளோடூடித்துரிசுபுகன்றேன்கருணைப்பரிசு
புகன்றறியேன்,புலைக்கொடியேன்புகன்றபிழைபொறுத்தருளல்வேண்டும்பொங்கு
திரைக்கங்கைமதிதங்கியசெஞ்சடையாய், மலைக்கொடியென்னம்மையருண்மாது
சிவகாமவல்லிமறைவல்லிதுதிசொல்லிநின்றுகாணக், கலைக்கொடிநன்குணர்முனிவ
ர்கண்டுபுகழ்ந்தேத்தக்கநகசபைதன்னடிக்குங்காரணசற்குருவே. ரு

## திருவருட்பா.

பழுத்தநின்குணராதேப்பத்தியருளோடிப்பழுதுபுகன்றேன் கருணைப்பாங்கறி யாப்படிறேன், புழுத்தலையேன்புகன்றபிழைபொறுத்தருள்வேண்டும்புண்ணியர் தம்முள்ளகத்தேதண்ணியமெய்ப்பொருளே, கழுத்தமைநஞ்சணிந்தருளுங்கருணைநெடுங்கடலே கான்மலரென்றலைமீதுதான்மலரவளித்தாய், விழுத்தலைவர்போற்றமணி மன்றினடம்புரியுமெய்ம்மையறிவின்புருவாய்விளங்கியசற்குருவே. ௬

கையுடைகன்கறியாதேகநவருளோடிக்காசுபுகன்றேன் கருணைத்தேசறியா க்கடையேன், பொய்யடியேன்புகன்றபிழைபொறுத்தருள்வேண்டும்புத்தமுதே சுத்தசுகபூரணசிறசிவமே, யையடிகள்காடவர்கோனகமகிழ்ந்துபோற்றுமம்பலத்தே யருணடஞ்செய்செம்பவளமலையே, மெய்யடியருள்ளகத்தில்விளங்குகின்றவிளக்கே வேதமுடிமீதிருந்தமேதகுசற்குருவே. ௭

திறப்படநின்குணராதேதிருவருளோடித்தீமைபுகன்றேன் கருணைத்திறஞ்சிறி துந்தெளியேன், புறப்படிறேன்புகன்றபிழைபொறுத்தருள்வேண்டும்பூசமுதனுத வரைப்புணருவித்தபுநிதா, வுறப்படுமெய்யுணர்வுடையாருள்ளகத்தேவிளங்குமு ண்மையறிவானந்தவுருவுடையகுருவே, சிறப்படைமாதவர்போற்றச்செம்பொன்ம ணிப்பொதுவிற்றிருத்தொழிலைந்தியற்றுவிக்குநடநாயகனே. ௮

தேர்ந்துணர்ந்துதெளியாதேதிருவருளோடிச்சிலபுகன்றேன் றிருக்கருணைத் திறஞ்சிறிதுந்தெரியேன், போந்தகனேன்புகன்றபிழைபொறுத்தருள்வேண்டும் போதாந்தமிசைவிளங்குநாதாந்தவிளக்கே, யூர்ந்தபணைக்கங்கணமேமுதற்றபணிக ளணிந்துயர்பொதுவினடிக்கின்றசெயலுடையபெருமான், சார்ந்தவரையெவ்வ கையுந்தாங்கியளிக்கின்றதயவுடையபெருந்தலைமைத்தனிமுதலெந்தாயே. ௯

ஒல்லும்வகையறியாதேயுன்னருளோடிப்பூறுபுகன்றேன் றுயரமாறும்வகையு ணரேன, புல்லியனேன்புகன்றபிழைபொறுத்தருள்வேண்டும்பூதியணிந்தொளிர் கின்றபொன்மேனிப்பெருமான், சொல்லியலும்பொருளியலுங்கடந்தபரநாதத்துரி யவெளிப்பொருளானபெரியநிலைப்பதியே, மெல்லியனற்சிவகாமவல்லிகண்டுமகிழ விரியுமறையேத்தநடம்புரியுமருளிறையே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

அபராதமன்னிப்புமாலை முற்றிற்று.

# ஆளுடையபிள்ளையாரருண்மாலை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகியலுணர்வோரணுத்துணையுமுற்றிலாச்சிறியவோர்பருவத்
திலகியவெனக்குள்ளிருந்தருணெறியிலேற்றவுந்தரமிலாமையினான்
விலகுறுங்காலத்தடிக்கடியேறவிடுத்தப்பின்விளைவுறத்தெளித்தாய்
திலகநற்காழிஞானசம்பந்தத்தெள்ளமுதாஞ்சிவகுருவே. க

உயிரனுபவமுற்றிடிலதனிடத்தேயோங்கருளனுபவமுறுமச்
செயிரினல்லனுபவத்திலேசுத்தசிவவனுபவமுறுமெனவுரைய்
பயிலுமூவாண்டிற்சிவைதருஞானப்பான்மகிழ்ந்துண்டுமெய்ந்நெறியாம்
பயிர்தழைத்துறவைத்தருளியஞானபந்தனென்றோங்குசற்குருவே. உ

தத்துவநிலைகடனித்தனித்தேறித்தனிப்பரநாதமாந்தலத்தே
யொத்ததன்மயமாநின்னைநீயின்றியுற்றிடலுயிரனுபவமென்
றித்துணைவெளியினென்னையென்னிடத்தேயிருந்தவாறளித்தனையன்றே
சித்தநற்காழிஞானசம்பந்தச்செல்வமே[illegible]குருவே. ங

தனிப்பரநாதவெளியின்மேனின்றதன்மயாதன்மயமாக்கிப்
பனிப்பிலாவெனை[illegible]பரம்பரத்தடம்புறமாகி
யினிப்புறுமொன்றும்[illegible]சிவானுபவமென்
றெனக்கருள்புரிந்தாய்ஞானசம்பந்தனென்னுமென்சற்குருமணியே. ச

உள்ளதாய்விளங்குமொருபெருவெளிமேலுள்ளதாய்முற்றுமுள்ளதுவாய்
நள்ளதாயெனதாய்நானதாய்[illegible]தாயின்ன
விள்ளொணாவப்பாலப்படிக்கப்பாலாம்வெறுவெளிசிவானுபவமென்
றுன்னுறவளித்தஞானசம்பந்தவுத்தமசற்குருவே. ரு

பொருத்தியமும்மலப்பிணிதவிர்க்கும்பொருளெனவனுபவமதற்குப்
பத்தியமுயிரினனுபவம்[illegible]பற்றறப்பற்றுதியிதுவே
சத்தியமெனவென்றனக்கருள்புரிந்ததனிப்பெருங்கருணையென்புகல்வேன்
முத்தியற்சிவிகையிவர்ந்தருணெறியின்முதலரசியற்றியதுரையே. சா

அடியெனலெதுவோமுடியெனலெதுவோவருட்சிவமதற்கெனப்பலகாற்
படியுறவருந்தியிருந்தவென்வருத்தம்பார்த்தருளாலெழுந்தருளி
மிடியறவெனைத்தான்கடைக்கணித்தெனக்குள்விளங்குமவ்வடிமுடியென்றாய்
வடிவிலாக்கருணைவாரியேமூன்றுவயதினிலருள்பெற்றமணியே. எ

செவ்வகையொருசாற்பமெதியளவேசெறிபொறிமனமதன்முடிவி
லெவ்வகைநிலையுந்தோற்றுநீநினக்குளெண்ணியபடியெலாமெய்து
மிவ்வகையொன்றேவருத்தமில்வகையென்றெனக்கருள்புரிந்தசற்குருவே
தெவ்வகையமணவிருளறவெழுந்ததீபமேசம்பந்தத்தேவே. அ

முன்புறநிலையும்பின்புறநிலையுமுன்னிநின்றுளமயக்குறுங்கா
லன்புறநிலையாற்றிருநெறித்தமிழ்கொண்டையநீத்தருளியவரசே
யென்புபெண்ணுருவோடின்னுயிரதுகொண்டெழுந்திடப்புரிந்தலகெல்லா
மின்புறப்புரிந்தமறைத்தனிக்கொழுந்தேயென்னுயிர்க்குயிரெனுங்குருவே. ௯

ஒருபகற்கற்பம்பலமுயன்றாலும்வரலருந்திறனெலாமெனக்கே
யொருபகற்பொழுதிலுறவளித்தனைநின்னுறுபெருங்கருணையென்னுரைப்பேன்
பெருமணநல்லூர்த்திருமணங்காணப்பெற்றவர்தமையெலாஞான
வுருவடைந்தோங்கக்கருணைசெய்தளித்தவுயர்த்தனிக்கவுணியமணியே. ௧௦

வேறு.

சீரார்சண்பைக்கவுணியர்தந்தெய்வமரபிற்றிகழ்விளக்கேதெவிட்டாதுளத்தி
ற்றித்திக்குந்தேனேயழியாச்செல்வமே, காரார்மிடற்றுப்பவளமலைக்கண்ணின்மு
ளைத்தகற்பகமேகரும்பேகனியேயென்னிரண்டுகண்ணேகண்ணிற்கருமணியே, யே
ரார்பருவமூன்றிலுமையினியமுலைப்பாலெடுத்தூட்டு மின்பக்குதலைமொழிக்குருந்
தேயென்னாருயிருக்கொருதுணையே, பேரார்ஞானசம்பந்தப்பெருமானேநின்றிருப்
புகழைப்பேசுகின்றோர்மேன்மேலும்பெருஞ்செல்வத்திற்பிறங்குவரோ. ௧௧

திருச்சிற்றம்பலம்.

## ஆளுடையவரசு அருண்மாலை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தகுசீரதிகையருட்டலத்திலோங்குஞ்சிவக்கொழுந்தினருட்பெருமைத்தி
றத்தால்வாய்மை,யுருத்தகுமெய்யுணர்ச்சிவடிவாகிச்சைவவொளிவிளங்கநாவரசெ
ன்றொருபேர்பெற்றுப், பொருத்தமுறவுழவாரப்படைகைக்கொண்டபுண்ணியனே
கண்ணியசீர்ப்புநிதனேயென், கருத்தமர்ந்தகலைமதியேகருணைஞானக்கடலேநின்க
ழல்கருதக்கருதுவாயே. ௧

வாய்மையிலாச்சமணாதர்பலகாற்செய்தவஞ்சமெலாந்திருவருட்பேர்வலத்தா
னீந்தித்,தூய்மைபெறுஞ்சிவநெறியேவிளங்கவோங்குஞ்சோதிமணிவிளக்கேயென்
றுணையேயெம்மைச், சேய்மைவிடாதணிமையிடத்தாளவந்தசெல்வமேயெல்லையி
லாச்சிறப்புவாய்ந்துள், ளாய்மையுறுபெருந்தகையேயமுதேசைவவணியேசொல்
லரசெனும்பேரமைந்ததேவே. ௨

தேவரெலாந்தொழுந்தலைமைத்தேவர்பாதத்திருமலரைமுடிக்கணிந்துதிகழ்ந்
துநின்ற,நாவரசேநான்முகனும்விரும்புஞானநாயகனேநல்லவர்க்குநண்பனேயெம்,
பாவமெலாமகற்றியருட்பான்மைநல்கும்பண்புடையபெருமானே பணிந்துநின்பா
ன்,மேவவிருப்புறுமடியர்க்கன்புசெய்யவேண்டினேனவ்வகைநீவிதித்திடாயே. ௩

விதியிலக்கீதென்றறியும்விளைவொன்றில்லாவிளையனேனெனினுமென்னைவிரும்பியென்னுண், மதிவிளக்கையேற்றியருண்மனையின்ஞானவாழ்வடையச்செயல்வேண்டும்வள்ளலேநற், பதிமலர்த்தாணிழலடைந்ததவத்தோர்க்கெல்லாம்பதியேசொல்லரசெனும்பேர்படைத்ததேவே, கதிதருகற்பகமேமுக்கனியேஞானக்கடலேயென்கருத்தேயென்கண்ணுளானே. ௪

கண்ணுளேவிளங்குகின்றமணியேசைவக்கனியேநாவரசேசெங்கரும்பேவேதப், பண்ணுளேவிளைந்தவருட்பயனேயுண்மைப்பதியேயாங்குறித்தேநின்பாதமன்றி விண்ணுளேயடைகின்றபோகமொன்றும்விரும்பேனென்றனையாளவேண்டுங்கண்டா, யொண்ணுளேயொன்பதுவாய்வைத்தாயென்றவுத்தமனேசித்தமகிழ்ந்துதவுவோனே. ௫

ஓங்காரத்தனிமொழியின்பயனைச்சற்றுமோர்கிலேன்சிறியேனிவ்வுலகவாழ்வி, லாங்காரப்பெருமதமால்யானைபோலவசம்பாவமயங்கியலைகின்றேனுன், பாங்காயமெய்யடியர்தம்மைச்சற்றும்பரிந்திலேனருளடையும்பரிசொன்றுண்டோ, தீங்காயசெயலனைத்துமுடையேனென்னசெய்வேன்சொல்லரசேயென்செய்குவேனே. ௬

செய்வகையொன்றறியாதசிறியேனிந்தச்சிற்றுலகவாழ்க்கையிடைச்சிக்கியந்தோ, பொய்வகையேபுரிகின்றேன்புண்ணியாநின்பொன்னடியைப்போற்றிலேன்புனிதனேநா, னுய்வகையெவ்வகையாதுசெய்வேனீயேயுறுதுணையென்றிருக்கின்றேனுணர்விலேனை, மெய்வகையிற்செலுத்தநினைத்திடுதியோசொல்வேந்தேயென்னுயிர்த்துணையாய்விளங்குங்கோவே. ௭

விளங்குமணிவிளக்கெனநால்வேதத்துச்சிமேவியமெய்ப்பொருளையுள்ளேவிரும்பிவைத்துக், களங்கறுமெய்யன்பரெல்லாங்களிப்பவன்றோர்கற்றுணையாற்கடல்கடந்துகரையிற்போந்து, துளங்குபெறுஞ்சிவநெறியைச்சார்ந்தஞானத்துணையேநந்துரையேநற்சுகமேயென்றும், வளங்கெழுமாகமநெறியைவளர்க்கவந்தவள்ளலேநின்னருளைவழங்குவாயே. ௮

அருள்வழங்குந்திலதவதியம்மையார்பின்னவதரித்தமணியேசொல்லரசேஞானத், தெருள்வழங்குஞ்சிவநெறியைவிளக்கவந்தசெழுஞ்சுடர்மாமணிவிளக்கேசிறியனேனை, யிருள்வழங்குமுலகியனின்றெடுத்துஞானவின்னருடந்தாண்டருள்வாயின்றேலந்தோ, மருள்வழங்கும்பவநெறியிற்சுழல்வேனுய்யும்வகையறியேனின்னருட்குமரபன்றே. ௯

தேர்ந்தவுளத்திடைமிகவுந்தித்தித்தூறுஞ்செழுந்தேனேசொல்லரசாந்தேவேமெய்ம்மை, சார்ந்துதிகழப்பூதியடிகட்கின்பந்தந்தபெருந்தகையேயெந்தந்தையேயுள், கூர்ந்தமதிநிறைவேயென்குருவேயெங்கள்குலதெய்வமேசைவக்கொழுந்தேதாபந், தீர்ந்தபெருநெறித்துணையேயொப்பிலாதசெல்வமேயப்பனெனத்திகழ்கின்றோனே. ௰

திருச்சிற்றம்பலம்.

## ஆளுடையநம்பிகளருண்மாலை.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

மதியணிசெஞ்சடைக்கனியைமன்றுணடம்புரிமருந்தைத்
துதியணிசெஞ்சுவைப்பொருளிற்சொன்மாலைதொடுத்தருளி
விதியணிமாமறைநெறியுமெய்ந்நிலையாகமநெறியும்
வதியணிந்துவிளங்கவைத்தவன்றொண்டப்பெருந்தகையே. க

நீற்றிலிட்டநிலையாப்புன்னெறியுடையார்தமைக்கூடிச்
சேற்றிலிட்டகம்பமெனத்தியங்குற்றேன்றனையாளா
யேற்றிலிட்டதிருவடியையெண்ணியரும்பொன்னையெலா
மாற்றிலிட்டுக்குளத்தெடுத்தவருட்டலைமைப்பெருந்தகையே. உ

இலைக்குளநீரழைத்ததனிலிடங்கருநவழைத்ததன்வாய்த்
தலைக்குதலைமதலையுயிர்தழைப்பவழைத்தருளியநின்
கலைக்கும்வடகலையின்முதற்கலைக்குமுறுகணைக்குயர்பொன்
மலைக்குமணுநிலைக்குமுருவன்றொண்டப்பெருந்தகையே. ௩

வேதமுதற்கலைகளெலாம்விளைந்துவிளைதந்தமுறை
யோதவவைக்கணுக்கணையுமுணர்வரிதாமெம்பெருமான்
பாதமலர்நினைந்துதிருப்பணிமுடிமேற்படப்புரிந்த
மாதவம்யாதுரைத்தருளாய்வன்றொண்டப்பெருந்தகையே. ௪

ஏழிசையாயிசைப்பயனாயின்னமுதாயென்னுடைய
தோழனுமாயென்றுமுனநீசொன்னபெருஞ்சொற்பொருளை
யாழநினைந்திடிலடியேனருங்கரணங்களைந்துகளைந்
தூழியின்புறுவனாகாணுயர்கருணைப்பெருந்தகையே. ௫

வான்காணவிற்றிருமாலயனுமாதவருந்
தான்காணவிறையருளாற்றனித்தவளயானையின்மேற்
போன்காணவெழுந்தருளிக்குலவியநின்கோலமதை
நான்காணப்பெற்றிலனேநாவலூர்ப்பெருந்தகையே. ௬

தேன்படிக்குமமுதாமுன்றிருப்பாட்டைத்தினந்தோறு
நான்படிக்கும்போதென்னைநானறியேனாவொன்றே
வூன்படிக்குமுளம்படிக்குமுயிர்படிக்குமுயிர்க்குயிருந்
தான்படிக்குமநுபவங்காண்டனிக்கருணைப்பெருந்தகையே.

றன்பாட்டுத்தொழிற்பொதுவிலியற்றுகின்றவெம்பெருமா
னுன்பாட்டுக்குவப்புறல்போலூர்பாட்டுக்குவந்திலனோ
றென்பாட்டுக்கிசைப்பிறுமென்னிடும்பாட்டுக்கரணமெலா
மன்பாட்டுக்கிசைவதுகாணருட்பாட்டுப்பெருந்தகையே. ௮

பரம்பராமாந்துரியமெனும்பதத்திருந்தபரம்பொருளை
யுரம்பெறத்தோழமைகொண்டவுன்பெருமைதனைமதித்து
வரம்பெறநற்றெய்வமெலாம்வந்திக்குமெனவுலகென்
றரம்பெறவென்புகல்வேனுன்றனித்தலைமைப்பெருந்தகையே. ௯

பேருரும்பரவைமணப்பிணக்கறவெம்பெருமானை
யூருரும்பலபுகலவேவரிராவிற்றூதனெனத்
தேருருந்திருவாரூர்த்தெருவுதொறுநடப்பித்தா
யாரூரநின்பெருமையயன்மாலுமளப்பரிதே. ௰

திருச்சிற்றம்பலம்.

## ஆளுடையவடிகளருண்மாலை.

தரவுக்கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

தேசகத்திலினிக்கின்றதெள்ளமுதேமாணிக்க
வாசகனேயானந்தவடிவானமாதவனே
மாசகன்றநீதிருவாய்மலர்ந்ததமிழ்மாமறையி
னாசகன்றவநுபவநானனுபவிக்கவருளுதியே. ௧

கருவெளிக்குட்புறனாகிக்கரணமெலாங்கடந்துநின்ற
பெருவெளிக்குநெடுங்காலம்பித்தாகித்திரிகின்றோர்
குருவெளிக்கேகின்றுழலக்கோதறநீகலந்ததனி
யுருவெளிக்கேமறைபுகழுமுயர்வாதவூர்மணியே. ௨

மன்புருவநடுமுதலாமனம்புதைத்துநெடுங்கால
மென்புருவாய்த்தவஞ்செய்வாரெல்லாருமேமாக்க
வன்புருவம்பெற்றதன்பின்னருளுருவமடைந்துபின்ன
ரின்புருவமாயினைநீயெழில்வாதவூரிறையே. ௩

உருவண்டப்பெருமறையென்றுலகமெலாம்புகழ்கின்ற
திருவண்டப்பகுதியெனுந்திருவகவல்வாய்மலர்ந்த
குருவென்றெப்பெருந்தவருங்கூறுகின்றகோவேநீ
யிருவென்றத்தனியகவலெண்ணமெனக்கியம்புதியே. ௪

தேடுகின்றவாநந்தச்சிற்சபையிற்சின்மயமா
யாடுகின்றசேவடிக்கீழாடுகின்றவாரமுதே
நாடுகின்றவாதவூர்நாயகனேநாயடியேன்
வாடுகின்றவாட்டமெலாம்வந்தொருக்கான்மாற்றுதியே. ௫

சேமமிகுந்திருவாதவூர்த்தேவென்றுலகுபுகழ்
மாமணியேநீயுரைத்தவாசகத்தையெண்ணுதொறுங்
காமமிகுகாதலன்றன்கலவிதனைக்கருதுகின்ற
வேமமுறுகற்புடையாளின்பினுமின்பெய்துவதே. ௬

வான்கலந்தமாணிக்கவாசகநின்வாசகத்தை
நான்கலந்துபாடுங்காலற்கருப்பஞ்சாற்றினிலே
தேன்கலந்துபால்கலந்துசெழுங்கனித்தீஞ்சுவைகலந்தென்
னூன்கலந்துவுயிர்கலந்துவுவட்டாமலினிப்பதுவே. ௭

வருமொழிசெய்மாணிக்கவாசகநின்வாசகத்தி
லொருமொழியேயென்னையுமென்னுடையனையுமொன்றுவித்துத்
தருமொழியாமென்னிலினிச்சாதகமேன்சஞ்சலமேன்
குருமொழியைவிரும்பியயல்கூடுவதேன்கூறுதியே. ௮

பெண்சுமந்தபாகப்பெருமானொருமாமே
லெண்சுமந்தசேவகன்போலெய்தியதாம்வைகைநதி
மண்சுமந்துநின்றதுமோர்மாறன்பிரம்படியாற்
புண்சுமந்துகொண்டதுநின்பொருட்டன்றோபுண்ணியனே. ௯

வாட்டமிலாமாணிக்கவாசகநின்வாசகத்தைக்
கேட்டபொழுதங்கிருந்தகீழ்ப்பறவைச்சாதிகளும்
வேட்டமுறும்பொல்லாவிலங்குகளுமெய்ஞ்ஞான
நாட்டமுறுமென்னிலிங்குநானடைதல்வியப்பன்றே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

ஆ மாலைகள்-௧௨-க்கு திருப்பா-௨௩௮.

## நான்காவது திருமுறை




முதற்றிருமுறை-திருப்பா........ ..... ௧௭௨௧.
இரண்டாவதுதிருமுறை-திருப்பா...... ௧௨௦௩.
மூன்றாவதுதிருமுறை-திருப்பா ........ ௨௩௫.
நான்காவதுதிருமுறை-திருப்பா... ......௨௩௮.

ஆ திருமுறை-௪-க்கு-திருப்பா........௩௫௦௫.

இராமையன்மருவாமையிராமையணிராமைய
ணராமுடிப்பூமணந்தபுகழருங்கருணீகக்குலத்தோன்
பராவுவடமீன்கற்பிற்சின்னம்மைசின்னம்மைப்
பொராவண்ணந்துணைகொண்டுபொதுநீக்கியறம்புரந்தான். ௪

தூய்மையாலுயர்தவத்தாற்றுருவமுறீஇயிருத்தலினன்
வாய்மையான்வடகலையெனவோங்கிவாழ்நாளிற்
சேய்மையாத்தனைப்பிரிந்திங்கெமைத்தெரியாச்சிறியோமை
நோய்மையோவுறவண்மையின்பத்துநுழைவிப்பான். ௫

மறைவிளங்கவாகமவாய்மைகள்விளங்கச்சைவநெறித்
துறைவிளங்கவடகலையுந்தென்றமிழுந்துணிபொருளி
னிறைவிளங்கநீடுயிர்கணெறிவிளங்கநிலைவிளங்கப்
பொறைவிளங்கப்பொய்புதைத்தாதேழையோம்புலம்விளங்க. ௬

விடையுகைக்குந்தான்றோன்றிவிரித்துக்காட்டியமெய்ம்மை
நடையுகக்கக்காட்டியுங்காணார்காணநாலாம்பொய்க்
கடையுகத்திற்கண்கூடாய்நிலைகாட்டப்பெருங்கருணை
மடையுடைத்துமயற்காட்டின்மயங்காமேவெளிகாட்டி. ௭

அறங்காட்டுந்துறைகாட்டியறுசமயத்தவரவர்க்குய்
திறங்காட்டிச்சிவங்காட்டிச்சித்திமுத்தித்திருக்காட்டிப்
புறங்காட்டிற்பொய்புலையையாமெய்ப்புலங்காட்டி
மறங்காட்டென்மனக்காட்டைவளராமேமதிகாட்ட. ௮

தவநெறியுந்தவப்பயனுஞ்சார்புஞ்சார்புணர்பொருளுஞ்
சிவனருளுமருட்பயனுந்தேர்ந்தனர்தேர்ந்ததுமுணரா
தவநெறியிற்புக்குழன்றங்கசதியாடுறுமறிவில்
பவநெறிநாத்திகருமுயப்பரிந்தருளினியல்காட்டி. ௯

சன்மார்க்கத்தவர்யாருந்தனிவிரும்புநிலைவிரும்பும்
புன்மார்க்கத்தவர்யாரும்பற்றுமொருபற்றாகி
யென்மார்க்கத்தவர்களுநாடரியபழம்பொருளெளியேன்
றன்மார்க்கத்தவம்போக்கித்தவமாக்கத்துணிந்தருளி. ௧௦

பொய்யோடப்பொய்யோடாப்புறநிலைகள்புலம்போட
மெய்யோடாவைதிகச்செம்மொழியொன்றன்வெய்யமல
மையோடமையோடுமனமோடமலிபிறவி
யையோடுமிறப்போடவருளோடுகண்ணோடி.

போக்குவரவில்லாதுபுறங்கீழ்மேலுண்ணடுசார்
பாக்குமிடையறவிருந்தவதிருக்கத்தொருதனிமை
நோக்கருநோக்குணர்வருளானோக்குறவெட்டுருவாகி
தாக்கருதாக்குறவன்றுகொண்டதொருதகைமையென. ௪௨

ஊரொடுபேருருவொன்றுமில்லாதவொப்பிலுணா
வோருருவீருருமுக்கணுவிருதோளெண்ணாமுகங்
சாருறுகண்டமுமாறுகவர்சடையுமறைத்தருளி
யேருறவந்தெழுந்ததுவோவன்றியிமையவர்க்கன்று. ௪௩

பொன்றுதிதனைவழங்கப்போர்சாட்டியெஃகேந்தி
யெந்நாளுமென்றுமெந்தையாதிருநோரு
மன்றாறுமுகமுமொளித்துற்றதெனலலதுமற்றிங்
கென்றுவதன்றூர்பாலிருஞ்செய்மைதனைப்புனைந்து. ௪௪

ஆறுமீறூர்முன்களிப்பவனிலநாள்கொண்டதென
வுறுநன்னியறுவைமீன்கொண்டருளியுலகமெலாம்
பெருஞ்சோலமதுசாட்டியுதயஞ்செய்பிள்ளையார்
வறியோம்பான்றனையுண்டார்மகிழ்ந்தனைபான்முலையுண்டார். ௪௫

திருமுகங்கண்டவர்யாரேயாயினுங்கண்டவேதீ
தொருவிமயக்கொழிந்தவர்தாஞ்செய்வனவுமறுவனவுந்
தருமுணர்ச்சிமுக்குற்றத்தடையறவாங்குறலானு
மருளன்பின்புறலானுமல்லலெல்லாமறலானும் ௪௬

பாதகரூதகங்களறப்பணலானும்பாவனையாய்க்
கோதறுபாவனைக்கெட்டாக்கொள்கைத்தாயுறலானு
மேதுருதன்னிலையாக்கிநிலைப்பயனுக்குறலாதி
வேதகத்தானும்பொருள்கோள்வெளிப்படையிற்புலப்படவே ௪௭

உருநாமமிராமலிங்கமெனக்கொண்டாரோங்கருளாற்
குருநாமமந்திரமாக்கொண்டுய்ந்தாருயநினைந்தார்
பெருநாமமந்திரத்தைப்பெற்றியறியாரெல்லாந்
திருநாமமிதுபிள்ளைத்திருநாமமென்பாரே. ௪௮

பாசமென்னக்கிடந்தேனைப்பசுவாக்கிப்பருவம்பார்த்
தாசகலவுணர்த்தியருளூட்டம்மையப்பனுமாம்
பேசரியபெரியாரைப்பேயுணர்வேன்பேசறியேன்
நேசவருமகவைசிறந்தாரெனவுஞ்சொலவியைந்தேன். ௪௯

மீதானத்துயர்பள்ளிமேவவெமைவைக்குமெங்கண்
மேதாவைப்பள்ளிவிழைந்தருளிற்றென்றுரைப்பதெவ
ஞேதாமேயெமையெல்லாமுணர்த்துமுருவெளியையச்சோ
வோதாமேயுணர்ந்ததென்பாருணர்கிலாரொருவியப்போ. உ0

அவ்வயிரோருயிர்கண்முத்தியாருநெறியறிவிப்பான்
செவ்வியினல்லருள்வலித்ததோதெரியேஞ்சிறந்துயிர்க
ளுய்வகையுள்ளிருந்துமொளிந்தொற்றிநின்றபடிகாட்டத்
தெய்வவொற்றிநின்றதனைத்திருவருளாற்றேற்றியதே. உக

அறவாழியர்தணையருள்பழுத்ததவக்கொழுந்தெவ்
வறமாவதெனிற்புல.நீர்சந்நிதியையடைந்துள்ளா
ரறமாவதெல்லாமுமொருங்கடையப்பெற்றுரோ
ரறமாவதெமக்கல்லாலடிகளுக்கென்னறஞ்சொலுமே. உஉ

ஆணவத்திறனெமாறாந்தறிவிழந்துவெம்பிறவிப்
பூணவத்தைப்பட்டுழலும்புன்கணறுத்துய்விப்பான்
மாணவத்தையருளுமறைவிரித்தமணிவாசகனுற்
பேணவத்தைச்சொரிதமிழ்ச்செம்பிரவாகம்பெருக்கருவித்தே. உ௩

சிற்றடியேம்பிழைத்தொழும்பைத்திருவுள்ளங்கொண்டகந்தை
முற்றுமொழித்தருள்விரவுபாசனுமுறைதெரித்துங்
கற்றமறவறிவுருவாயுருவெளியாயுருவாகிக்
குற்றமறுத்துணர்வூட்டிச்சேணினுமெய்க்குறிக்கொள்ள. உச

நல்லருளினியல்பெளியேம்பெறக்காட்டநன்னீராற்
செல்லவிருளறவிளக்கங்கெரிவித்தூந்தீச்சனன
வல்லபிணியறவிக்கும்வகைகாட்டும்படியுடலி
னல்லல்செயும்பிணியனைத்துமருண்மொழியானேயறுத்தும். உரு

"தோடுடையசெவிய" னெனுந்தொடையானம்முன்றோன்றலெவர்க்கு
நாடுடையபொருட்சுட்டிநன்றுவிளக்கியதென்ன
வீடுடைய "வுலகமெலாமுதிக்கின்ற" வெனுந்தொடையாற்
பீடுடையபொருட்சுட்டிப்பேறெமக்கின்றீதென்றும். உசா

வேதியாய்மலக்களிம்பைநீக்கியெமைப்பொன்னாக்கும்
வாதியாயருள்விழுங்கிமாயாவாதியனாகிச்
சோதியாய்விளையாடிற்றோன்றலுக்கோராயிரம்பே
ரோதினுமுணர்வுடையதொண்டரொலாமொருசிலவர். உஎ

தளித்துரைத்தவிராமலிங்கத்தனிமறையாதரித்துய்ந்தா
ரினித்தவருட்பிரகாசவள்ளலெனவினிதேத்தி
யநித்தமற்றார்சிலவறவரந்தோவென்போன்மறந்து
மனித்தனெனக்கொண்டொழிந்தார்மலவாழ்விற்சிலமறவர். ௨௮

முலையுண்ணிமோட்டெருமைப்பாற்கடன்மீனெனவாழு
நிலையுயிர்கடமையுடையபூரணத்துணின்றுமந்தோ
வலைவகன்றாரிலர்தன்பத்தழுங்குகின்றாரறியாமைத்
தலையிருந்தாரினமென்றுலவர்க்குணர்த்துந்தரமன்றே. ௨௯

என்பணங்காய்க்கற்றூணமிருங்கடனுவாயாகி
முன்புகராமுண்டமகச்சினுட்பின்முருகாய்வம்
தன்புறநன்னரிப்பரியேயாகவுமந்தோவறியார்
தன்பெருமைச்சலமின்றிச்சந்துரைப்பார்த்தடுப்பரிதே. ௩௦

ஆருயிர்கள்வினைக்கிடாயவ்வவர்கட்கறிவொழுக்கஞ்
சீருறுதெய்வஞ்சமயஞ்சிக்கெனவேயாத்தருளாற்
றேருமொருசிவன்பருவந்தேற்றுவதாற்றிருவருளோ
யோருமதல்லால்வேறென்னுரைப்பதியாமுயர்புலவீர். ௩௧

வேறு.

அமலனூர்க்கிதோர்புகழ்கொலாமாடலரியதிற்கிளந்தனைறியே
னிமலசந்நிதிநேர்தரும்பொன்றேனேர்ந்தநேர்ச்சியிலவாறுசிறந்த
கமமுறுபுத்திமுத்தியுற்றுயிர்கள்கனிவுறவிதஞ்செயுமென்றேற
சமரசவேதசன்மார்க்கசங்கச்சாதுளார்பொறுப்பவொன்பினுமே. ௩௨

வேறு.

எந்தையருட்பிரகாசனின்னுயிர்கடமைத்தேற்றச்
சந்தமுறவினமாடுந்தண்ணருளாடலைப்போற்றச்
சுந்தரநல்லருளெடுத்துக்கைதருமேற்றொழுதிறைஞ்சிப்
பந்தவினைத்தொடக்குமயற்படருமறமொழிந்துய்வேன். ௩௩

ஆயவருளிறையெங்களருட்பிரகாசப்பெருமான்
றூயவருளாற்பொழிந்தசொல்லமிழ்தாந்தமிழ்ப்பெருக்கு
நேயவருட்பற்றுகிநிறைமனத்துப்பெரியர்க்கு
மாயமயக்குழலென்போன்மறவர்க்குமுள்ளுருக்கி. ௩௪

அளவாதபேரன்புசொரிந்தருளைவிளைவித்துத்
தளவாருநகைக்கயற்கட்டையலிடங்கொண்டபிரான்
வளமாருங்கழன்மலரோடிரண்டறுத்துவாழ்விக்கு
முளவாலேயருட்பாவென்றொருநாமம்பூண்டதவே. ௩௫

மருளாலேசிலரொன்போன்மருளாலேமயங்கியுணர்ந்
தருளாலேயுரைத்ததெனவருட்பாவினுரைகொண்டார்
தெருளாலேதன்சிந்தைதனைத்தெளிவித்துச்சிவமாக்கு
மருளாலேயுரைத்ததெனவருட்பாவினுரைகொண்டாம். ௩௬

அத்தகையதிருவருட்பாவுபாசனைலீலைகண்முறைமை
யுய்த்தறியச்சோர்ந்தமொடுசாத்திரமாயுறுதலினாற்
சுத்தமுறவெப்பொருளும்விளக்கெழுவாய்த்தொல்லெழுத்தை
வைத்தவெழுத்தைந்தினுண்மைமலர்விக்கும்வாய்மையினால். ௩௭

அறுசமயத்துள்ளாருமயலாருமவராறியப்
பெறுபொருளுமளவாதபெரும்பொருளுங்காட்டலினு
லுறுதிபெறுமத்துவாவதன்மேலாயுறுபொருளை
மறுவறக்காட்டுகையாலுமற்றூறுமுறையாக. ௩௮

பிரிந்துபிரியாதருளின்பெற்றிமிக்குப்பிணக்கறமா
தெரிந்துமுறைசெய்தருளுஞ்சிறப்பானேதிருவருட்பா
விரிந்தமுறையாறெனவேமெய்யருளின்றொடர்பாட்டாற்
பரிந்தன்பருலகமெலாம்பழிச்சுபுகழ்நிலவியதே. ௩௯

பண்ணிறந்ததமிழ்வேதப்பழம்பனுவறறொகையதன்சீ
ரொண்ணிறந்துநின்றனபோலெண்ணிறந்ததாங்கவற்று
ளெண்ணிறைந்தகருணையினாலுயிர்க்குறுதிபயப்பமுனங்
கண்ணிறைந்தசுவைமருந்தாமைந்துமுறைகண்டமட்டில். ௪௦

திருநெறியதமிழாகித்தெய்வமுறைபன்னொன்று
மொருநெறியமனம்வைத்தாருறுகாறுந்திருத்தில்லைக்
கருநெறியங்ககல்விக்குங்கடப்பாளன்கைச்சரியாட்
பெருநெறியர்சேமித்துவைத்ததொருபெற்றியென. ௪௧

அமலமருடிருவருட்பாவருண்மரபுதனைச்சூழ்த்துக்
கமையுறுமாசேமித்துவைத்திருந்ததென்பர்கண்டு
ரொருமையுடையானெல்லாமும்வல்லவருட்பிரகாசன்
சமரசவே தச்சன்மார்க் கச்சங்கச் சாதுக்கள். ௪௨

தந்திருக்கூட்டத்துள்ளான்சதுரையான்பெரியசிவா
நந்தபுரவிழைவுடையானஞ்செல்வராயன்பா
லந்தியிளம்பிறையணியுமணிமுடியைமறைத்தபிரான்
சுந்தரக்கைசாத்தியவத்திருவேடுதொகுத்தன்றே. ௪௩

பண்ணீர்மைச்சுவைமுதிர்ந்ததிருப்பதுவலருட்பாயினைத்
தண்ணீரொன்றுருவெண்பாச்சம்பந்தப்பிரான்வழியிற்
றெண்ணீர்த்தென்கடல்வருஞ்சிதம்பரமாமுனிதெரித்தா
லுண்ணீர்மையொன்றாயிலேனுரைப்பதுமோர்புகழாமே. ௩௪

வேறு.

ஆறுவதுமுறையாரியனூர்தம்மருளானே
வேறோசார்சேர்முற்றன்றெம்வினைவிளைபாகம்
தேறுப்பருவர்நேர்ந்தென்றிசினோருதவிற்க
வீறாமறைறைமுறைவெளிவந்தமைவிரிசெய்வாம். ௩௫

வேறு.

ஆங்கவற்றைச்சிலரறிந்தாரறியாருமாகப்பி
னோங்கருளான்முதனுச்சாமிப்பெயரினோருரவன்
றீங்ககலமனபதைக்குததிருவொற்றிச்சிவபெருமான்
பாங்கருட்சந்நிதிமுன்னர்ப்பகர்ந்துபத்திவித்தினனே. ௩௬

அப்பதியின்புழுளேச்சிறிதுபூத்தருள்விரவ
மெய்ப்பதியிற்சிலவர்விமலவருட்பாவிழைந்து
செப்புறனூர்யாவனொன்றேதேடுறுதேட்டங்கண்டு
துப்புறனூர்சிலவொழுதித்துரிசிற்றூர்பரிசுநனூர். ௩௭

ஈதுணர்ந்தங்கென்போல்வாசிற்சிலவர்பொருள்விழைவாற்
கோதறுவார்மரபிறந்துகோள்விராஆய்ச்சிறிதச்சிற்
பேதுறத்தாமபொறிததலுமபபெற்றியுணர்ந்தாங்குரைத்த
தீதிறிருவருட்செலவராயப்பேர்சேமத்தான். ௩௮

மறுக்கத்தானமரொலாநொர்தழுலும்வந்தழலும்
பொறுக்கத்தானருநஞ்சமமுதுண்டுபொனமிடறு
கறுக்கத்தாலுளம்வைத்தகணனுளனகழறகன்பா
னிறுக்கததான்கற்றவனேரிரதினமெனபானேடு. ௩௯

வேறு.

வில்லாருஞ்சிறுபிள்ளைமதிப்பிஞ்சணிவேணிப்
பொல்லார்மன்றுடியசேவடிசோபுலமிக்கா
னல்லார்நம்பெருமககட்கினியானவையில்லான்
மல்லார்திணடோணம்பியவனறுனைவலியாலே. ௪௦

வேறு.

சிவநேசச்சிவராசயோகியர்க்காந்திருச்சிறந்த
தவநேசன்வாசுதேவப்பெயர்கொடகுதியனே
பவநேசமற்றூர்கள்பற்றுபசுபதிக்கினிய
நவநேசனியாசாமிப்பெயரோனேயிருவர் ௪௧

தங்கனைமுன்னிட்டவரைத்தடுத்ததன்றியறநோக்கி
யங்குசிலபொருளீந்துமவர்தனியேகரந்துமீட்
டுங்கச்சிலிட்டுவெளியாக்குறக்கண்டுள்ளுடைந்து
மங்கலஞ்செய்நாயகர்க்குவழிமொழிவிண்ணப்பித்து. ௫௨

முறையுளித்தாமச்சியற்றவிரத்தினப்பேர்முதுச்குன்றவ
னிறையருளுக்கேற்றிரப்பவெந்தையருளிசைவினறிக
குறையிரந்தார்குறைக்கிரங்குங்கொள்கைகண்டவக்குணவான்
மிறையுள்ளார்மிகையறுக்கமேற்கொண்டங்குசாவுதலும். ௫௩

பல்லவகோத்திரத்துவந்தசபாபதிமால்பயந்தருளு
நல்லவனெம்முயிர்த்துணையாஞயனாகமுன்மறவாச்
செல்வமிகுகாரணத்தானுஞ்செல்வராயனென
வல்லபடிமுன்னுவன்றவண்மைப்பேர்சமேமநிதி. ௫௪

வேறு.

தன்னடைந்தார்த்தாஞகத்தாங்குபெருந்தயாளன்சற்குணங்களெல்லாம்
பொன்னுருவொன்றெடுத்ததெனும்புகழாளியுயிருமொருபொருளனுருக
வென்னவர்க்குமீகைபயிற்றேந்தலுணர்வினுக்குறையுள்யார்கருந்தந்த
முன்னமுணர்ந்துபகரிக்குமுதலியப்பாவண்ணலருண்முளைநவமீனி. ௫௫

வேறு.

விற்புருவநெரித்தருளிவீறடக்கப்புரம்பொடித்த
பொற்புருவச்சிலையாளிபுண்ணியநீற்றன்புடையா
னற்புருவனருட்பிரகாசப்பெருமான்திருவருட்குச்
சொற்புதுவைவேலையனறனைத்துணையாந்துணைகொண்டு. ௫௬

வேறு.

வேண்டுவனவுபகரிக்கக்கலிநாற்பத்தொன்பதுநூற்றறுபானமேலெட்
டாண்டெழுதாவெழுத்தேற்றிநான்குமுறையரசறியவெளியிட்டியார்க்கும்
பூண்டெழுபேரின்பமகிழ்வதுபெருகப்பணிபுரியும்பெறறியானே
காண்டகுசீர்த்தேவநாயகனருளுமிரதநினப்பேர்க்காத்திட்டானே. ௫௭

வேறு.

மிக்கமறையேத்துமுக்கண்வித்தகனார்திருமயிலைத்
தொக்கவிளங்கோக்குடியில்வருநாயனகுணநிதியான்
சிக்கிட்டியருள்சோமசுந்தரனசெய்தாளாண்கைம
நக்குலகுதிருவருட்பாவினிதுபெறத்தனைந்தனரே. ௫௮

வேறு.

நேசமெல்லாமுடையார்க்காயுள்ளமுருகிநிறையமிந்த
தேசனெங்கள்சடகோபன்றெய்வத்தமிழோர்வடிவாகிப்
பாசங்கமுன்றுவடகலைப்பாற்கடற்கோர்பஃறியாஞ்சீனி
வாசவரதப்பெயர்கொளறங்காயுநாவின்மறைக்கொழுந்து. ௫௯

வேறு.

வேதனார்மாலார்காணருமுக்கண்விகிர்தனார்விளம்பருஞான
போதனாரளவாப்புனிதனார்நாயேன்புழுத்தலைக்கினிதிருத்தியசெம்
பாதனாரன்பருளம்பிரியாதபரமனாரருட்பிரகாச
நாதனார்கருணைக்குறையுளார்வீராசாமிப்பேர்நற்றவக்கொழுந்து. கூ0

வேறு.

தவமாயிருக்குமந்தாணிநெஞ்சர்தகுமுயிர்க்கின்புசெய்தக்க
சிவமுனாபெரியரருட்பிரகாசதேசனார்திருவடிக்கன்ப
ரவமறுதெய்வநாயகனப்பாசாமியேயாதியாரியர்க
ளைவமுறுசென்னைக்கூடன்மற்றுள்ளநற்றலந்தொறுநங்கணுதன். கூக

பொன்பழித்தலர்செந்தாமரைகுழைத்தபூங்கழற்கன்பராயுள்ளார்
தன்பொருஉஞ்சீர்த்திச்சமரசவேதசன்மார்க்கத்தனிப்பெருஞ்சங்கத்
தென்பவமறுக்குமெம்பெருமக்களின்செவிக்களமபுகுந்தெளியேன்
றுன்பறச்சென்னியாசிருந்தன்றித்தூயநல்லருள்வரலாறே. கூ௨

வேறு.

நடந்தசெயலருள்காட்டநான்வருந்தபடியன்றி
மடம்படுமென்னறிவானேவருந்தன்றுமாதலின்று
விடம்படுநம்முனைருணர் னெம்பெருமக்கள்சபையு
முடம்படும்புன்மொழியெனவாறுகைமேலாமோங்குகவே. கூ௩

திருச்சிற்றம்பலம்.

வரலாறு ஒருவாறு முற்றிற்று.

இவ்வரலாறு - அடியார் மாணாக்கர்

தொழூவூர் - வேலாயுதமுதலியாரால்

சொல்லப்பட்டது.

இது - வேதாகம சுத்தசைவ சித்தாந்த
சமயாசாரியபீடமாய் விளங்குகின்ற
மதுரைத்திருஞானசம்பந்தசுவாமிகளாதீனம்

## சிதம்பரசுவாமிகள் அருளிச்செய்தது.

### திருவருட்பாமகிமை.

நேரிசைவெண்பா.

தண்ணீர்விளக்கெரித்ததன்மைபோன்மாந்தர்கட
முண்ணீர்சிவம்விளங்கவோங்குவிக்குங்-கண்மணியா
நங்களிராமலிங்கனல்லவருட்பாமுறையைத்
துங்கமுறமாணுதொழு.

### ஆசாரியஸ்துதி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாய்மலர்ந்தபெருங்கருணைத்தத்துவனுமொங்கள் சனிப்பிறப்பையொறுத்துவினைத்தனித்தொடக்கையறுக்க, வேய்மலர்ந்தகருணைதிருமேனிகொண்டகாலத்தெண்டோளோவிருதோளோமுக்கண்ணோவிருமை, யாய்மலர்ந்தவருட்கண்ணோநாமமெழுத்தைந்தோவன்றியருளிராமலிங்கவற்புதப்பொற்பெயரோ, வாய்மலர்ந்தநீரிரண்டுமறையோமூவிரண்டுமாமுறையோவகுத்துரையீர்மயக்கொழிமாதவரே.

## இது-பொன்னேரி-சுந்தரபிள்ளையவர்களால்

செய்யப்பட்டது.

# திருவருட்பா.

## முதற்றிருமுறை பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| உ | எ | பாகிதம் | பரகிதம் |
| ௩ | க | சாமர்த்தியத்திரு | சாமர்ததியதிரு |
| ,, | ௩ | சாட்சி | சாக்ஷி |
| ௫ | அ | நெல்வாயல் | நெல்வாயில் |
| எ | அ | நண்ணும் | நண்ணு |
| க௨ | கஎ | மெழுநதூர் | மழுந்தூர் |
| க௪ | ௬ | யிநநிமிடஞ் | விநநிமிடஞ் |
| ,, | அ | மநதணததை | மநதணத்தைக் |
| கஎ | கக | பாவந்தம் | பாவநத்தம் |
| கஅ | உஎ | ஞூரில்வா | ஞூரில்லாக் |
| க௯ | உ௪ | அவநாசி | அவிநாசி |
| ௩உ | கஎ | யார்காமம் | யார்ககாமம் |
| ௩௫ | உ௬ | வரமாய் | வரமாய |
| ௩௬ | உஎ | யோகியா | யோகியா |
| ௩௯ | எ | மறைக் | மறை |
| ௪0 | உக | முருத்திரரும் | முருத்திரனும் |
| ௫௪ | உ0, உஉ, உ௪ | திக்கண்டாய் | திகண்டாய் |
| ௫௫ | க௯ | ஏழைமை | ஏழமை |
| ௫௬ | ௪௫ | ருலந்து | ருலர்நது |
| ௬உ | ௯ | மங்கதனை | மங்கதுனை |
| ௬எ | உ0 | யெனககே | யெனக்கே |
| ௬அ | உ0 | கொண்ட | கோண்ட |
| எ0 | ௪ | யவவித | வவ்வித |
| எ௩ | க௩ | யென்கேளெ | யென்கேளே |
| எ௬ | ௫ | ஒன்னலர் | ஒன்னலர் |
| எஅ | அ | துைாயே | துறையே |
| எ௯ | க | வோன் | வான |
| ,, | உ | துைாயே | துறையே |
| அ0 | உக | தொல்லாம் | தெல்லாம் |
| ,, | உ௫ | வேதன | வேதனை |
| அக | க0 | ளைஞ்சும் | ளஞ்சும் |
| ,, | கக | லைஞ்சும் | லஞ்சும் |
| அ௪ | க௯ | னீன | ணின் |
| அ௫ | க | குருவே | குருவோ |
| ,, | உஎ | தார்தவத்தொடு | தார்வத்தோடு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௮௬ | உக | வாயன்றே | வாயன்றேல் * |
| ௮௮ | ௪ | போவென் | போவேன் * |
| ௮௯ | ௬ | வெம்பனே | வம்பனே * |
| ,, | உ௯ | பெற்றெடுத்தாய் | பெற்றிடுதாய் * |
| ௯0 | உ | யுள்ளார் | யுளார் * |
| ,, | க0 | னேய்யா | னய்யா * |
| ௯க | ௬ | சாறீர்ந் | தாற்றீர்ந் * |
| ௯௪ | க0 | னான்பா | னன்பர் * |
| ௯௫ | உக | தின்னெனம் | தின்னணம் * |
| ,, | .. | சித்தமிரங்காத | சித்தந்திரும்பாத * |
| ௯௬ | ௬ | னட்டு | ஞட்டு * |
| க0௮ | ௪ | யெண்ணி | யெண்ணிக் * |
| க0௯ | உக | யின் | பின் * |
| க௫உ | உ௪ | யிடர் | யிடா * |
| க௫௪ | க௮ | றேன் றுனே | றேன்புனே * |
| க௬௫ | ௫ | திற்சாதம் | திலகாதம் * |
| க௭௫ | ௩ | சுதயிற | சுதையிற் * |
| ,, | உ௩ | யனேகீர் | யனேயீர் * |

## இரண்டாவது திருமுறை பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | உஉ | தேகி | தேகித் * |
| ௮ | க௯ | வில்லெடுங் | வில்லெடுக்குங் * |
| க௭ | ௬ | குலேவிலா | கொலேயிலா * |
| உ0 | க | துணேயாஞ் | துணேயாகுஞ் * |
| ,, | க௪ | செய்யாத்துட்ட | செய்யாதுட்ட * |
| உஉ | உ௩ | கோண்பதா | கோண்பநர் * |
| உ௪ | க௪ | மணே | வணே * |
| உ௫ | க௫ | மனேஞ்யாற் | மனேஞ்யாற் * |
| உ௬ | உ௬ | கடங்காத்தி | கடங்காதி * |
| உ௭ | க௮ | ஞெட்டகல | ஞெட்டகல * |
| ,, | ௩க | முடியாத்துன்ப | முடியாதுன்ப * |
| உ௯ | ௫ | னெஞ்சமே | நெஞ்சமே * |
| ௩0 | க௬ | நாடோறு | நாடொறு * |
| ௩உ | கஉ | ருன்றேநின் | ருன்றேனின் * |
| ,, | ௪௮ | ஞயிலுங் | ஞய்க்கடைக்குங் * |
| ௩௩ | க௩ | லோடுங் | லொடுங் * |
| ௩௯ | உக | துறவோர் | துரவோர் * |
| ௪0 | ௯ | யெடுப்போன் | யொடுபொற் * |
| ,, | ௪௮ | யெஞ்சாத | யெஞ்சாத் * |
| ,, | உக | வாயலிலே | வாயிலிலே * |
| ௫க | உக | தெண்டகிடு | தெண்டனிடு * |
| ,, | உ௩ | படாதனே | படாதானே * |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | |
|---|---|---|---|---|
| ௪௨ | ௨௦ | கண்டாய்த்தி | கண்டாய்தி | * |
| ,, | ௩௦ | மலர்க்கொன்றை | மலர்கொன்றை | * |
| ௪௫ | ௭ | ஜாடை | ஜொடை | * |
| ௪௯ | ௭ | நீக்கியவழி | நீக்கியவ்வழி | * |
| ௫௦ | ௬ | வயற்றூண் | வயிற்றூண் | * |
| ௫௫ | ௨௧ | மற்கடம் | மர்க்கடம் | * |
| ,, | ௨௬ | தேன் | தென் | * |
| ௫௯ | ௨௪ | யேயொற்றி | யெதொற்றி | * |
| ௫௮ | ௨௮ | னயர்ந்தில | னயர்த்தில | * |
| ௬௨ | ௧௪ | பேயவர்க்கு | பேய்வர்க்கு | * |
| ௬௬ | ௮ | னடையே | னடைவே | * |
| ௭௧ | ௨௭ | றுயுர்ந்தோர் | றுயர்ந்தோர் | * |
| ௮௩ | ௧௩ | னல்லவர் | னல்லவன | * |
| ௮௬ | ௨ | கீழ | கீழ் | * |
| ௮௭ | ௧௯ | புரந்தக | புராந்தக | * |
| ௮௮ | ௧௧ | வாழ்க்கைது | வாழ்க்கைத்து | * |
| ௧௩௦ | ௬ | சைலம் | சயிலம் | * |
| ௧௩௨ | ௨ | மிந்த | மிக்குந் | * |
| ௧௩௩ | ௧௯ | மலையாணம | மலையாண்ம | * |
| ௧௩௫ | ௧ | யருமருந்து ... ௧௫ | யருண்மருந்து ... ௧௩.[illegible] | |
| ,, | ௨௮ | போற்றி | போற்றிபொறுவ் | * |
| ௧௩௬ | ௯ | ஞற் | [illegible]ன் | * |
| ,, | ௧௦ | தீர்ச்சேத | தீர்[illegible] | * |
| ௧௪௩ | ௨ | சத்துவம் | [illegible]வம் | * |
| ௧௪௫ | ௧௪ | கிளர் | கிளர | * |
| ௧௪௬ | ௧௫ | ருளத்தை | ருளத்தே | * |
| ௧௪௭ | ௧௬ | சிவயோக | சிவோக | * |
| ௧௪௯ | ௧௪ | பேசுவாரோ | பேசுவாரோ | * |
| ௧௫௩ | ௨௨ | துணிப்பாள் | துளிப்பாள் | * |
| ,, | ,, | முன்னே | பின்னே | * |
| ௧௫௫ | ௧௪ | வவர்தங் | வவன்றன் | * |

## மூன்றாவது திருமுறை பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | |
|---|---|---|---|---|
| ௨ | ௧௯ | பொருமாளி | பொருமாரி | * |
| ௩ | ௧௩ | கனச்சிலை | கனசிலை | * |
| ௧௨ | ௪ | வலமேவலமே | வலமேவலமென | * |
| ௧௭ | ௧ | லொப்பொன் | லொப்பென் | * |
| ௧௮ | ௧௦ | அந்தோயி | அந்தோயீ | * |
| ௧௯ | ௨௮ | திணை | திணி | * |
| ௨௨ | ௧௧ | யளா | யறு | * |
| ௨௪ | ௬ | புயத்தை | புயத்தைத் | * |
| ௨௫ | ௧௦ | பித்தடையசெய் | பிச்சடையச்செய் | * |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩ | ௨௧ | கற்றது... ... ... | சுற்றது ... ... * |
| ௩௪ | ௮ | வுயர்த்தனி ... ... ... | வுயர்தனி... ... ... * |

பிழைதிருத்தம் முற்றிற்று.

## இனியச்சிற்பதிப்பிக்கப்படுபவை.

ஐந்தாவது திருமுறை திருத்தணிகைப்பதிகம் ... ௧
நடராஜநிபுணம் ... ௨
நடராஜவிசித்திரம்... ... ௩
நடராஜமதுரம் ... ௪
நடராஜஅலங்காரம் ... ௫
நடராஜஞானநாடகம் ... ௬
நடராஜஆநந்தநாடகம் ... ௭
சிதம்பரவுபதேசம் ... ௮
சிற்றம்பலநடனம் ... ... ௯
பொன்னம்பலநடனம் ... ௧௦
பொதுநடனம் ... ...௧௧
தத்துவநடனம் ... ... ௧௨
ஆநந்தநடனம் ... ௧௩
அதீதநிலை ... ... ௧௪
அருள்விளக்கம் ... ௧௫
மெய்ப்பொருள்விளக்கம் ... ௧௬
மெய்ம்மொழிப் பொருள்விளக்கம் ... ... ௧௭
சன்மார்க்கவிளக்கம் ... ௧௮
சாதனவிளக்கம் ... ௧௯
கலாந்தவிளக்கம்... ... ௨௦
யோகாந்தவிளக்கம் ... ௨௧
நாதாந்தவிளக்கம்... ... ௨௨
போதாந்தவிளக்கம் ... ௨௩
வேதாந்தவிளக்கம் ... ௨௪
சித்தாந்தவிளக்கம் ... ௨௫
அண்டவிளக்கம் ... ... ௨௬
பிண்டவிளக்கம் ... ௨௭
சுத்தசிவராசியம்... ... ௨௮
பரசிவராசியம் ... ௨௯
மந்திரக்கொத்து... ... ௩௦
மகாவாக்கியவகை ... ௩௧
பொதுவேதம் ... ... ௩௨
குடும்பகோஷம் ... ௩௩
தத்துவவிருத்தி ... ... ௩௪
பிரகிருதிவிருத்தி ... ...௩௫
இயல்வகை ... ... ௩௬
அளவைவகை ... ௩௭
ஞாயவகை... ... ... ௩௮
இலக்கணவிருத்தி ... ௩௯
தருக்கவிருத்தி ... ... ௪௦
தென்மொழிவிளக்கம் ... ௪௧
வடமொழிவிளக்கம் ... ௪௨
உலகியல்விளக்கம் ... ... ௪௩
கலைமரபு ... ... ௪௪

# பாட்டு முதற்குறிப்பகராதி.

## முதற்றிருமுறை.

### சிவநேச வெண்பா.